"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

---

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1893௵ மார்ச்சு௴. இலக்கம். 11.

## சுதந்தரங்களின் விளக்கம்.

2-ம். அத்தியாயம். (தொடர்ச்சி)

8. ஒருவராலும் தங்களுக்குச் சொந்தமாக்கப்படாத சொத்து இரண்டுவிதமாக வித்தியாசப்பட்டுக் காணப்படுகின்றது.

(1) சிலசொத்துக்களை யார் பின்தொடர்ந்து தங்களுடைய புத்தி நுட்பத்தாலும் வலிமையினாலும் தங்கள் வசமாக்கினார்களோ அவர்களே அவற்றின் சொந்தக்காரராகிறார்கள். ஆனால்பிறரும் அதேமாதிரியாய் இப்படிப்பட்ட சொத்துக்களைத் தங்களுடைய பிரயத்தனத்தினால் சம்பாதித்துக்கொள்வதை இழந்துபோகாமலிருப்பது ஆவசியகம். உதாரணமாக, ஒரு காட்டில் வேட்டையாடிப் பெறக்கூடிய மிருகங்கள் ஏராளமாயிருக்கையில், ஒருவனால் வேட்டையாடிப் பிடிக்கப்பட்ட மிருகங்கள் அவனுக்கே சொந்தமாகும்; ஏனெனில், பிறரும் அவனைப்போல தங்கள் சிரமத்தைச் செலவிட்டால் மிருகங்களைப் பிடித்து தங்களுக்குச் சொந்தமாக்கிக்கொள்ளலாம். இப்படியே நிலைபிறிந்து ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோகக்கூடிய சொத்துக்களெல்லாம் யார் அவற்றை முதலிற் பிரயத்தனஞ் செய்து தேடிப் பிடிக்கிறார்களோ அவருக்கே சொந்தமாகின்றன.

(2) உயிரில்லாத பொருட்களில் மனிதருக்கு விசேஷ உபயோகமுள்ள சிலவற்றைக்கண்டுபிடித்தற்காவது, நமது வசமாக்குகிறதற்காவது அதிகப் பிரயத்தனம் வேண்டாது அவற்றைச் செழித்து வளரச்செய்தற்கு நிரம்ப பிரயத்தனஞ் செய்யவேண்டியதாயிருக்கிறது. இதற்கு நிலமே பிரதான உதாரணம். நிலத்திலிருந்தடையக்கூடிய உபயோகமான பொருட்களையெல்லாம் மனிதர் அடையும்படி செய்வதற்கு, பிறரை முழுவதும் விலக்கி அந்நிலத்தை ஒருவருக்கே சொந்தப்படுத்த வேண்டியதாயிருக்கிறது. பிறரும் இப்படி நிலத்தைத் தங்களுக்குமாத்திரம் சொந்தமாகப் பெறுதற்குள்ள சுதந்தரத்தை மீறாது, யார் நிலத்திலுழைத்து விளைவை யுற்பத்திசெய்கிறார்களோ அவருக்கு அந்நிலத்தை எவ்விதமான சுதந்தரங்களுடன் உட்படுத்தவேண்டுமென்று நாம் நிச்சயிக்க வேண்டும்.

முதலாவதுட்பிரிவில் சேர்ந்த பொருட்களை அடுத்தபிரிவிற் பிரஸ்தாபித்து, அதற்குப் பிந்திய பிரிவில் இரண்டாவதுட்பிரிவிற் சொல்லிய பொருட்களைப்பற்றி பிரஸ்தாபிப்போம்.

9. முதலாவதுட்பிரிவிற் சேர்ந்த சொத்துக்களிலுள்ள சுதந்தரம் இரண்டுகாரணங்களாலுண்டாகின்றது.

(1) அவற்றைக்கைவசப்படுத்த எவன்பிரயத்தனப்படுகிறானோ அவனுக்கே அவை சொந்தமாகின்றன. மனிதன் பிழைத்திருத்தற்கு வேண்டிய எல்லாவஸ்துக்களும் உழைப்பினால் மாத்திரமே கிடைக்கக்கூடுமென்று யாவரும் எளிதி லறியலாம். தரையிலுதிர்ந்துகிடக்கும் பழமாயிருந்தாலும், குனிந்து அதைக் கையினு

லெட்டி எடுக்கிற பிரயத்தனத்தையாவது மனிதர் செய்யவேண்டியதாய் இருக்கிறது. இதற்கு வேண்டிய பிரயத்தனத்தை ஒருவன் சுயேச்சையாய் வேறொருவனுடைய இஷ்டத்திற்காவது கட்டாயத்திற்காவதுட்படாது செய்து அந்தப் பொருளை எவ்விடத்திற்குக் கொண்டுபோனால் அது தனக்குபயோகப்படுமோ அவ்விடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கிறான். இதனால் அப்பொருளுக்கும் அவ்வுழைப்பாளிக்கும் ஒருறவு உண்டாகிறது. இவ்வுறவே அவன் அப்பொருளின் சொந்தக் காரனாதற்குக் காரணமாகின்றது.

(2) இவ்வுறவுண்டாவதற்குமுன் அப்பொருளுக்கும் மற்றொருவருக்கும் இதேமாதிரியான உறவு உண்டாயிருக்கவில்லை. அதாவது, அப்பொருள் வேறொருவனுடைய சுதந்தரத்திற்கும் உட்பட்டிருக்கவில்லை. மற்றெல்லவரும் அப்பொருள்விஷயத்தில் ஒரேமாதிரியான சம்பந்தத்தை யுடைத்தாயிருக்கையில், குறித்த ஒருவனுக்கும் அதற்கும் நெருக்கமான உறவுண்டாயிருக்கிறது. இவ்வொருவனுக்கும் மற்றெல்லவருக்கும் அப்பொருள்விஷயத்திற் சமமான உறவு உண்டாகுமெனில், அதைச் சம்பாதிப்பதில் மனிதர் பிரயத்தனப்படுவதற்கு அவசியமாகிய தூண்டுதல் அழிந்துபோம்.

பிரயத்தனம், கைவசப்படுத்தல் (அல்லது குடிகொள்ளல்) ஆகிய இவ்விரண்டு காரணங்களைக்கொண்டே இவ்வகுப்பிலடங்கிய பொருட்களெல்லாம் மனிதரின் சுதந்தரங்களுக்கு ஆதியிலுட்பட்டன. இப்படி பிரயத்தனப்பட்டு கைவசப்படுத்துவதினா லுண்டாகும் சுதந்தரம் பின்வரும் பொருட்களில்மாத்திரமே செலுத்தப்பட்டு வந்ததென்று ரோமாபுரி ராச்சியத்தில் பேர்போன தர்மவிதானகர்த்தர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. (1) நிலம், சலம், ஆகாயம் முதலியவைகளிற் சஞ்சரிக்கும் சீவராசிகளை யார் பிரயத்தனஞ்செய்து தமது கைவசமாக்குகிறார்களோ அவரே அவற்றின் சொந்தக்காரர் ஆகிறார். அவை சொந்தக்காரரின் கைவசம் விட்டு நீங்கினால் அவற்றைப் பிறர் பிரயத்தனஞ்செய்து தங்களுக்குச் சொந்தமாக்கிக்கொள்ளலாம். மாடப்புறா, கலைமான்போன்ற சீவசந்துக்கள் தங்களுடைய சொந்தக்காரரின் வீடு, தோட்டம் இவைகளிலிருந்து சற்று நீங்குவதும் திரும்புவதுமாய் வளர்ந்து வருகின்றன; இவ்வழக்கம் நீங்கினால் அவற்றைப் பிறர் தங்கள் கைவசமாக்கிச் சொந்தப்படுத்திக் கொள்ளலாம். (2) தன்னுடைய நிலத்திலாவது ஒருவருக்குஞ் சொந்தமாகாத நிலத்திலாவது ஒருவனுக்குப் புதையலகப்பட்டால் அப்புதையல் அவனுக்கே சொந்தமாகும்: பொதுவான நிலத்திலகப்பட்டால் ஒருபகுதியைச் சர்க்கார் கஜானாவிற் செலுத்தி மற்றபகுதியைத்தான் எடுத்துக்கொள்ளவேண்டியது. இத்தேசத்தில் இவ்வேற்பாடு நடபடிக்கையிலில்லை. (3) சத்ருக்களிடத்தி லிருந்து பலாத்காரமாய்ப் பிடுங்கப்பட்ட சொத்து யாரால் பிடுங்கப் படுகிறதோ அவரைச் சேருகின்றது. (4) வேறொருவனுக்குக் கொடுக்கவேண்டுமென்னும் எண்ணம் சிறிதேனுமில்லாமல் சொந்தக்காரனால் கைவிடப்பட்ட சொத்து நிலமாயிருந்தாலும் வேறாயிருந்தாலும் அதை எவன் தன் கைவசப்படுத்துகிறானோ அவனுடையகைவசத்துக்குட்படுகிறது. மேலும் ஒரு சொத்திற்கு தகுந்த சொந்தக்காரன் ஒருவரும் காணாமல் அதைத் தற்காலத்தில் வைத்திருப்பவன் ஒரு குறிப்பிட்ட கால் நிர்ணயத்திற்குக் குறையாமல் உபயோகித்து வந்திருந்தால் அதற்கு அவனே சொந்தக்காரனாவான். இத்தேசத்தில் தற்காலத்திலும் இப்படிப்பட்ட விதி ஒன்று சட்டத்தினாலேற்பட்டு வழங்கிவருகிறது. இவ்விதி மனிதருக்குச் சுகமாயிருக்கிறதென்பதைத் தவிர ஒழுங்குதவறாத சன்மார்க்கத்தை யோசித்தால், காலஹரணத்தால் மாத்திரம் உண்மையான சொந்தக்காரனுடைய சுதந்தரம் என்னாளும் தவறிப் போகக்கூடியதல்ல.

ரோமாபுரி ராச்சியத்திலுள்ள தர்மவிதானகர்த்தர்களால் ஆதரிக்கப்பட்ட இச்சித்தாந்தம் (அதாவது, ஒருவருக்கும் சொந்தமாகாத சொத்து யார்வசம் முதலில் அகப்பட்டதோ அவரே அதற்குச் சுதந்தரமுடையவர்களாய் ஏற்பட்டார்களென்பது) தகுந்த ஆதாரத்துடன் கூடியதல்லவென்று ஸர் ஹென்றி மேயின் என்பவர் ஸ்தாபித்திருக்கிறார். ஆதி மனிதர் குடும்பத்தின் ஒழுங்குக் குட்பட்டிருந்தார்களென்றும், அக்காலத்தில் நடந்த விவகாரங்களெல்

லாம் பரஸ்பரம் குடும்பங்களுக்குள் பொதுவாகவே நடத்தப்பட்டு வந்தனவென்றும், தற்காலத்தில் நாகரீகம் அடைந்த தேசங்களில் மனிதர் சுயேச்சையாய் உடன்படிக்கை செய்து கொள்ளுவதைப்போல் அக்காலத்தில் செய்து கொள்ளவில்லை யென்றும் கீர்த்திபெற்ற இந்நூலாசிரியர் பலவாறு வாதித்திருக்கிறார் என்பதை இதற்குமுன் எடுத்துக்காட்டியிருக்கிறோமல்லவா. சொத்திற்குறிய சுதந்தரத்தைப்பற்றி மேல் விவரிக்கப்பட்டிருக்கும் சித்தாந்தத்தில் குடும்ப சமுதாயத்தின் செயல்களைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை. பிரத்தியேக மனிதர் எப்படி சொத்தைத் தங்களுக்குச் சொந்தப்படுத்திக்கொண்டார்கள் என்பதைப் பற்றி மாத்திரமே அதில் பிரஸ்தாபம் செய்யப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணமென்னவெனில், ஆதியில் ஸ்வபாவிக நிலை யொன்று மனிதருள் வழங்கிவந்ததென்றும், அந்நிலைமையில் சுயேச்சையாயும் சுகமாயும் வசித்துவந்த மனிதரின் செயல்களை அறிவதினால் மாத்திரமே இப்பொழுது வழங்கிவரும் ஏற்பாடுகளின் உத்பத்தியை நாம் அறியக்கூடுமென்றும் சிலர் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். ஆனால் பூர்விக சங்கங்களில் வழங்கிவந்த இச்சுவபாவிக நிலையைப்பற்றி யாவது அச்சங்கங்களிலடங்கிய பிரத்தியேக மனிதரின் செயல்களைப்பற்றியாவது நமக்கு சிறிதும் அறிவுகிடையாது. ஆகையால் சொத்திற்குரிய சுதந்தரத்தைப்பற்றி மேற்கூறிய சித்தாந்தத்தைப் பிழையென்றே கொள்ளவேண்டியது.

தற்காலத்தில் சொத்திற் கொண்டாடப்படுஞ் சுதந்தரமெல்லாம் பூர்விகத்தில் குடும்பத்தினுலும் குடும்பங்களின் சனசங்கியை விர்த்தியுடைவதினால் உண்டாகும் கிராம சமூகங்களாலும் பொதுவில் அனுபவித்துவந்த சுதந்தரத்திலிருந்தே உற்பத்தியாயிருக்கின்றன. இதற்கு தற்காலத்தில் இத்தேசத்திற் காணப்படுகின்ற சில ஏற்பாடுகளே பலமான சாட்சியாயிருக்கின்றன. தஞ்சாவூர் ஜில்லாவில் நானைக்கும் சில கிராமங்களுக்கு கரையேடு கிராமங்களென்று பெயர். அக்கிராமங்களில் ஒருவயலும் நிரந்தரமாய் ஒரு குடும்பத்திற்கு மாத்திரம் சுயாதீனப்பட்டிருப்பதில்லை; கிராமத்திலுள்ள வயல்களெல்லாம் அடிக்கடி மாற்றப்பட்டு வெவ்வேறு குடும்பங்களால் அனுபவிக்கப்பட்டுவருகின்றன. நிலங்களெல்லாம் கிராமசமூகத்திற்குப் பொதுவென்று கொள்ளப்பட்டும், கிராமத்தில் மிராசுபாத்தியமுடைய குடும்பத்தாருள் விபாகிக்கப்பட்டும், மூன்று அல்லது ஏழுவருடங்களுக்கொருதடவை மேற்கூறியபடி மாற்றப்பட்டும் வருகின்றன. மேலும் அக்கிராமங்களில் இவ்வேற்பாடு பன்னிரண்டுவருடங்கள் வரைக்கும் எந்தக்காரணத்தாலாவது நிறைவேற்றப்படாமல் தடைபட்டிருந்தால் பின் அதை என்னாளும் நிறுத்திவிடுவது வழக்கம். எல்லா கிராமங்களும் ஆதியில் கரையேடுகிராமங்களாகவே இருந்தனவென்று துரைத்தன நூலிற் பயின்றவரில் பலர் சொல்லியிருக்கிறார்கள். இதனால் நாமறிவதுயாதெனில், சொத்தெல்லாம் கிராம சமூகத்தாருடைய பொதுவாகிய சுதந்தரத்திற்குட்பட்டிருந்ததென்பதும் இப்பொதுவான சுதந்தரம் நாளடைவில் வழக்கம் மாறிப்போய்விட்டதனால் பிரத்தியேக மனிதரின் சுதந்தரத்திற் குட்பட்டுவிட்டன வென்பதுமே.

மேற்கூறப்பட்டது நிலத்திலுள்ள சுதந்தரத்திற்கு மாத்திரம் உத்பத்தியைக் குறிப்பதல்லாது வேறு விதமான சொத்திலுள்ள சுதந்தரத்தின் உத்பத்தியை விளக்கவில்லை யென்று சிலர் ஆட்சேபிக்கலாம். அப்படி பகுத்துச் சொல்லுவதற்கு தகுந்த ஆதாரமில்லை. நாளைக்கும் நமக்குள் அனேக அவிபக்த குடும்பங்கள் அங்கு மிங்கும் இருக்கின்றன. அவற்றில் நிலம், வீடுமுதலிய எல்லா சொத்தையும் குடும்பத்திற் சேர்ந்தவர் பொதுவிலனுபவித்து வருகிறார்கள். புதல்வன் ஒருவன் பிறந்தவுடனே அவனுக்கு குடும்பச் சொத்தில் பாத்திய முண்டாகிறதும் தவிர பகுத்தறியும் படியான வயது முதிர்ந்த வுடனே மனதிருந்தால் தன்னுடைய பாகத்தை பிரத்தியேகமாய் அனுபவித்துக்கொள்ளலாம். இச்சுதந்தரத்தைக் கொண்டாடாது அவிபக்தர்களாய் குடும்பத்துடன் சேர்ந்து வசித்துஎல்லாச்சொத்தையும்பொதுவிலனுபவித்து வருவது தற்காலத்தில் வரவர அரிதாய்க்கொண்டு வந்தாலும், முற்காலத்தில் அவ்வேற்பாடு வெகுசாதாரணமாய் நடந்து வந்ததென்பதைச் சிறிதேனும் ஆட்சேபிக்கக் கார

ணமில்லை. ஆகையால் ஆதியில் நிலம் மாத்திரமல்லாது எல்லாவித சொத்திற் குரிய சுதந்தரமும் பொதுவில் அனுபவிக்கப்பட்டு வந்து நாளடைவில் பலகாரணங்களால் இப்பொதுவான சுதந்தரம் அழிந்து பிரத்தியேக சுதந்தரத்திற்கிடம் கொடுத்ததென்று பலவித்துவான்களால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு வேண்டிய ஆதாரங்கள் இப்பொழுது நமது ஹிந்துதேசத்தில் வழங்கிவரும் சம்பிரதாயங்களுள் மேற்கூறியபடி காணப்படுவதல்லாமல், முற்காலத்தில் ரோமாபுரி ராச்சியத்தாருள் நடபடிக்கையிலிருந்தும் தற்காலத்தில் ஐரோப்பியருள் பிரதான வினத்தார்களில் வழங்கும் சட்டங்களுக்கு மூலாதாரமாய் ஒத்துக்கொள்ளப்பட்டு மிருக்கிற பெயர் பெற்ற ரோம சட்டவொழுங்கிலும் பலவாறு காணப்படுகின்றன. மேலும் உருஷிய, அங்கிலேய, ஜர்மானிய தேசங்களிலும் தற்கால வியவசாய முறைகளிற் சிலவற்றை இச்சித்தாந்தத்திற்கு பலமான சான்றாக அனேகர் எடுத்துக்காட்டி யிருக்கிறார்கள். அவற்றை இவ்விடத்தில் தகுந்தபடி விவரிக்கிறதற்குச் சந்தர்ப்பமில்லை.

10. அடுத்து ஆலோசிக்க வேண்டியது இன்ன தென்று முன்பே எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. அதாவது, எல்லா சொத்துக்களிலும் பிரதானமாகிய நிலத்திற்குரிய சுதந்தரம் எப்படிப்பட்ட தென்பதும், எவ்விதமாய் அனுபவித்து வரவேண்டிய தென்பதுமே. நிலத்திலிருந்து பெயர்த்தெடுக்கக் கூடிய பொருட்களிலுள்ள சுதந்தரத்தைக் காட்டிலும் நிலத்திலுள்ள சுதந்தரத்தினிலக்கணத்தைக் குறிப்பாய் விளக்கிக் காட்டுவது பிரயாசமென்று சாதாரணமாய் யாவர்க்கும் விளங்கும். ஏனெனில், அதை நமக்கு வேண்டுங்கால் நம்முடைய பிரயத்தனத்தைக்கொண்டு உத்பத்தி செய்துகொள்ள முடியாது. அது கடவுளால் மனிதருக்குக் கொடுக்கப்பட்டிருப்பதும் தவிர, உலகத்திலுள்ள நிலம் அளவற்ற தல்ல. அதிலும் பயிரிடக்கூடிய நிலம் நிரம்ப சொல்பமென்றே சொல்லவேண்டியது. மேலும் தரையிலிருந்து பெயர்க்கக்கூடிய சொத்தைக்காட்டிலும், நிலத்திற்கும் சனங்களின் சுகத்திற்கும் வெகு சமீபமான உறவிருக்கின்றது. ஏனெனில், உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருட்களெல்லாம் நிலத்திலிருந்தே உத்பத்தியாகின்றன. துரைத்தனத்தார் நிலத்தைத் தங்களுடைய விசாரணைக்குட்படுத்துவதுபோல் நமது இதர சொத்துக்களை தங்களுடைய ஆதீனத்துக்குட் படுத்துவதற்கு மனிதர் எவ்விடத்தும் சம்மதிக்கிறதில்லை. இவ்விஷயங்களை எல்லாம் ஆலோசித்துப் பார்க்குமளவில் நிலத்திற்குரிய சுதந்தரத்தைப்பற்றி பின்னே குறிக்கப்படும் இரண்டு மூன்று விசேஷங்கள் வெளிப்படுகின்றன.

முதலாவது, துரைத்தனத்தார் தங்களுடைய குடிகளை இரட்சிக்கக் கடமைப்பட்டிருப்பதால் வெவ்வேறு மனிதரின் பிரத்தியேக சுதந்தரத்திற் குட்பட்டிருக்கும் நிலத்தை மேற்கூறிய கடமையைச் செலுத்தற்காக தக்கபடி உபயோகித்துக் கொள்ளலாம். ஆனால் நிலத்தின்சொந்தக்காரரில் எல்லோரையும் அவரவர் நிலங்களின் உயர்வு தாழ்வுக்கும் அவற்றின் அளவுக்கும் தக்கபடி பட்சபாத மில்லாது துரைத்தனத்தார் பொதுவான விதிகளுக்கு மாத்திரமே உட்படுத்தக்கூடும். நிலம் மனிதரில் ஒருவராலும் உண்டாக்கப்படாமல் கடவுளின் கிருபையினால் மனிதரின் சுகத்திற்காகப் படைத்துக் கொடுக்கப்பட்டிருப்பதால், நிலத்தில் மனிதருக்குப் பிரத்தியேக சுதந்தரம் கூடாதென்றும், ஒவ்வொரு சங்கத்தாருடைய நிலம் முழுவதும் அவர் எல்லவர்க்கும் பொது வென்றும், துரைத்தனத்தார் சனசமூகத்தின் பிரதிநிதியாய் நின்று நிலத்திலுள்ள சுதந்தரத்தை நிர்வாகித்து அதை பயிரிடக்கூடியவருள் குத்தகைக்குப் பிரித்துவிட்டு குத்தகைப்புணத்தை வசூல் செய்து பொது நலத்திற்குச் சாதனமாய் உபயோகித்து வரவேண்டிய தென்றும், சிலர் தங்கள் கொள்கையைப் பரவச்செய்து வருகிறார்கள். இவருடைய அபிப்பிராயத்தைப் பற்றி ஆலோசிப்பதற்கு இது சமயமல்ல. தற்காலத்தில் நாகரீக மடைந்த எல்லாதேசங்களிலும் நிலத்திற் சுதந்தரம் வெவ்வேறு மனிதரால் அனுபவிக்கப்பட்டு வருகிறதே யன்றி அத்தேசங்களில் ஆளுகை செலுத்திவரும் துரைத்தனத்தார் நிலமெல்லாம் தங்களுடைய தென்று பாவிக்கும் நடபடிக்கை எங்குமில்லை. பயிரிடுஞ்

செலவு போக பாக்கி வரும்படியானது குத்தகைப்பணமாக பிரத்தியேகச் சொந்தக்காருக்கே செலுத்தப்பட்டு வருகிறது. துரைத்தனத்தார் வரியை மாத்திரம் வாங்கி வருகிறார்களே தவிர குத்தகைப்பணத்தை தங்களுடையதென்று வசூல் செய்து நிலத்திற்குள்ள பூரண சுதந்தரத்தையும் தாங்களே நிர்வகித்து வருவதாகக் காணப்படவில்லை. மேலும் நிலத்திற்குரிய சுதந்தரம்முழுவதும் முற்காலத்தில் சனங்களால் பொதுவிலனுபவிக்கப்பட்டு வந்ததாக மேற்கூறப்பட்டிருப்பதைக் கொண்டு, நிலமெல்லாம் துரைத்தனத்தாருடையதென்று சொல்லுவது தகாதென்று வெளிப்படுகிறதும் தவிர, அப்பொதுவான சுதந்தரத்திலிருந்துதான் தற்காலத்தில் நிலத்தில் வெவ்வேறு மனிதருக்குள்ள சுதந்திரங்களெல்லாம் உத்பத்தி அடைந்தன வென்றும், அச்சுதந்தரங்களையனுபவித்து வர அவருக்குப் பாத்திய முண்டென்றும், துரைத்தனத்தாருக்கு நிலம் அவசியமாயிருந்தால் சொந்தக்காரனுக்கு தகுந்த விலை கொடுத்து அவனுடைய சுதந்தரத்தை நீக்கியபின் மாத்திரமே அவர் நிலத்தைக் கைப்பற்றலாமென்றும் நாம் தெளிவாய் அறிகிறோம். முற்காலத்தில் ஐரோப்பா கண்டத்திலும் வேறு சிலவிடங்களிலும் நிலமெல்லாம் அரசனுடையதென்றும், அரசனிடத்திலிருந்து சிலபிரபுக்கள் வரி கொடுத்தல், போரிற் சேவித்தல் முதலிய நிபந்தனைகளுக்குட்பட்டு நிலத்தைப் பெற்றுக்கொண்டார்களென்றும், இந்நிபந்தனைகளின் வேறுபாட்டினால் பலதிறங்களாக வகுக்கப்பட்ட நிலங்களை யடைந்து அனுபவித்து வந்த பிரபுக்களிடத்திலிருந்து சுவாதந்திரியத்தை யுடைய சாதாரண சனங்கள் நிலங்களைக் குத்தகைக்கு வாங்கிப் பயிர் செய்து வந்தார்களென்றும், இப்படிப்பட்ட ஏம்பாடு ஐரோப்பாகண்டத்தில்மத்திய காலங்களிலிருந்ததினால் அங்கும், மேற்கூறியபடி வேறு சில விடங்களிலும் நிலமெல்லாம் அரசனுடைய சுதந்தரத்திற்கு மாத்திரமுட்பட்டிருப்பதாயும் பிரத்தியேகமனிதருக்கு நிலத்தில் ஒருவித சுதந்தரமுமில்லை யென்றும் சிலர் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். இவ்வபிப்பிராயம் பிழையென்பதற்கு தகுந்த ஒரு காரண மிருக்கிறது. அதாவது, மேற்கூறிய குத்தகையேற்பாட்டிற்குட்படாது சில நிலங்களில் சனங்களே சர்வ சுதந்தரத்தையும் அனுபவித்து வந்தார்கள்; அவற்றை அரசர் சர்வமான்னியமாகக் கொடுத்ததினால் சனங்கள் அவற்றிற்குச் சொந்தக்காரராகவில்லை. ஆகையால் எல்லா நிலமும் எக்காலத்தும் அரசருக்கே சொந்தமாயிருந்ததென்று கூறுவதற்கு ஆதாரமில்லை. இப்பரதகண்டத்திலும் நிலத்திலுள்ள சுதந்தரம் ஆதியில் கிராம சமுகத்தாருடையதாகவே இருந்ததென்பதற்கு தகுந்தகாரணம் மேல் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. அங்கிலேயரிற் சிலர் இத்தேசத்தில் சனங்களுக்கு நிலத்தில் ஒருவித சுதந்தரமுமில்லையென்றும், அச்சுதந்தரம் எக்காலத்தும் துரைத்தனத்தாரால் அனுபவிக்கப்பட்டு வந்திருக்கிறதென்றும் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். இதுஒருபெரும் பிழையென்பதற்குச் சந்தேகமில்லை. பூர்வீகத்தில் மனுநீதி தவறாது செங்கோல் செலுத்தி வந்த ஆரியவரசர்களும், மத்தியகாலத்தில் அரசு செலுத்திய மகம்மதியரும் சனங்களுக்கு நிலத்திற் பாத்தியமில்லை யென்றும், நிலத்தின் சொந்தக்காரரென்று பேர்பூண்டவரெல்லாம் தங்களுடைய குத்தகைக்காரரென்றும் நடபடிக்கைகளிலாவது தஸ்தாவீஜுகளிலாவது ஒருபொழுதும் குறித்திடாதிருக்கையில் தற்காலத்தில் துரைத்தனத்தை வகித்து வரும் அங்கிலேயருக்குமாத்திரம்நிலத்திலுள்ளபூரண சுதந்தரம் எவ்வாறு கிடைத்ததென்று நன்றாய் விளங்கவில்லை. இந்த விஷயத்தில் அங்கிலேயருள்ளும் அபிப்பிராய பேதம் இல்லாதிருக்கவில்லை.

இரண்டாவது, நிலம் தற்காலத்தில் வெவ்வேறு மனிதரின் சுதந்தரத்திற் குட்பட்டிருந்தாலும், அதனால் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சனங்கள்பிரயாணம்செய்தற்குள்ள சுதந்தரத்தை இழந்து விடுவதில்லை. பாலங்கள் பாதைகள் முதலானவை சனங்களின் சஞ்சாரத்திற்கு அவசியமாயிருக்கின்றன; அவையில்லாது மனிதரின் சங்கங்கள் அபிவிர்த்தி யடைவது சாத்திய மல்ல. போக்கு வரவிற்கு வேண்டிய பாதைகளை யடைந்து சனங்கள் சீர்திருத்தம் சுகானுபவம் முதலியவற்றைக் கைக்கொள்ளுவதற்கு அவருக்குச் சுதந்தர முண்டென்பதைப்பற்றிச் சிறிதேனும் சந்தேகமில்லை, ஆகை

யால் அவற்றைச் சனங்கள் அடையக்கூடாத படிக்கு நிலத்தின்சொந்தக்காரர் தங்களுடைய சுதந்தரத்தைக் கைக்கொண்டு நிறைவேற்றல் தகாது. இப்படியே ஒருவனது நிலத்தின் வழியாய் ஒரு நீரோட்டம் சுபாவமாய் ஓடிக்கொண்டிருந்தால், பிறர் அதை உபயோகிப்பதைத் தடுக்கும் வண்ணம் அந்நிலத்திலுள்ள சுதந்தரத்தைச் செலுத்தா திருக்க அவன் நிர்ப்பந்தப்பட்டிருக்கிறான்.

(இன்னும் வரும்.)

கி. சுந்தரராமன், எம்., ஏ.

---

## நடுவேனிற்கனவு.

### 5-ம் அங்கம்.

---

1-வது இடம். ஆதேன்ஸ் நகரம். தீஸியுஸ்ஸினது அரண்மனை.

[தீஸியுஸ், ஹிப்பாலிடா, பிலாஸ்ட்ரேட், பிரபுக்கள், பரிவாரங்கள் வருதல்.]

ஹிப்பாலிடா.—என் தீஸியுஸ்ஸே, அக்காதலர்கள் சொல்வது மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது.

தீஸியுஸ்.—அவர்கள்சொல்வதில் ஆச்சரியம் உள்ள அளவு உண்மையில்லை. இங்ஙனமுள்ள அற்புதக் கட்டுக்கதைகளையும், கந்தர்வர்களைப் பற்றிய புத்தியில்லாப் பிதற்றல்களையும் நான் ஒருநாளும் நம்பேன். காமுகர்களும் பித்தர்களும் கொதிக்கும் மூளையை யுடையவர்கள்; மனத்து உருவ மமைக்கும் கற்பிதசக்தியை உடையவர்கள்; ஆதலின், அமைந்த விவேகத்துக்கு அகப்படாதனவெல்லாம் அம்மூளைக்கும் சக்திக்கும் பிடிபடுகின்றன. பித்தனும், காமுகனும்,கவியும்முற்றிலுங்கற்பித சக்தியினாலேயே அமைந்தவர்கள். ஒருவன் பரந்த நரகத்துள்ள பேய்களிலும் அதிகப்பேய்களைக் காண்கிறான்; அவன்தான் பித்தன். காமுகனோ, பித்தன்போன்றே *இரதியின் (ஹெலனின்) அழகைக்குறத்தியின் (ஜிப்ஸியின்) உருவத்திற் காண்கிறான். கவியின் கண்ணோ, சுத்தமான உன்மத்தத்திற் சுழன்று வானமுதற்பூமிவரையிலும் பூமிமுதல் வானம் வரையிலு முள்ளவற்றைக் காண்கின்றது. யாருமறியாப்பொருள்களைக் கவி தன் மனத்தாற்கற்பிக்க, அவன் எழுதுகோல் அவற்றிற்கு உருவங்கொடுத்து அம்மாயச் சூனியத்திற்கு இருப்பிடமும் பெயரும் நல்குகின்றது. இப்படிப்பட்ட குணமுடையோர் கற்பித சக்தியை அதிகமுடையோராதலின், மனத்தாற் கிரகிக்கத்தக்க மகிழ்ச்சியைக் காணுமிடத்து அம்மகிழ்ச்சியின் பிறப்புக்குக் காரணமானவற்றையும் கற்பித்துக்கொள்ளுகிறார்கள். இரவில் மனத்துத் தோன்றும் பயத்தாற் செடியானது கரடியாக எளிதில் எண்ணப்படுகிறது.

ஹிப்பாலிடா.—அவர் தங்களுக்கு 'இரவில் கேர்ந்தனவென்று சொல்லியவை யெல்லாம் ஒரு தொடர்ச்சியான கதையாதலையும், அவர்களுக்கு அப்பொழுதுண்டான மனவேறுபாடுகளையும் யோசிக்குமிடத்து அவை முற்றும் அவருடைய மனத்தோற்றத்தால் விளைந்தவையல்லவென்றே நாம் எண்ணல் வேண்டும். அவற்றின் பயனாக நிலையான மாறுதல் டெமிட்ரியஸ்ஸிடத்தில் இப்பொழுதும்காணப்படுகின்றது. ஆயினும் அவை நாம்வியக்கத்தக்க அதிசயமே.

தீஸியுஸ்.—இதோ, அக்காதலர்கள் இன்புற்று உவகையோடு வருகிறார்கள்.

[லைஸாண்டர், டெமிட்ரியஸ், ஹெர்ம்யா, ஹெலனா வருதல்.]

நண்பர்களுக்கு நாளுக்குநாள் மனத்து அன்பு வளர்க; மேன்மேலும் இன்பம் பெருகுக.

லைஸாண்டர்.—எம்முடையவற்றிலும் அதிகமான அன்பும் ஆநந்தமும் உமக்கு நடக்குமிடத்தும் உண்ணுமிடத்தும் உறங்குமிடத்தும் எங்கும் உண்டாகுக.

தீஸியுஸ்.—வாருங்கள்; நம் சிற்றுண்டிக்கும் நாம் உறங்கும் நிசிவேளைக்கும் இடையில் ஒரு ஜாமகாலம் செல்லவேண்டுமே. அக்காலம் சுகமாய்க் கழிவதற்கு என்னவேஷக் கூத்துவேண்டும்; என்ன நாட்டியம் வேண்டும்? நம்முடைய உல்லாஸ விஷயங்களுக்குக் காரியக்காரனாயிருப்பவன் எங்கே? என்னவிதமான வேடிக்கைகள் கையிருப்பில் இருக்கின்றன? நமக்கு ஒரு வேலையுமில்லா நீண்டகாலத்தின் துன்பத்தைத்

---

* ஹெலன்:—கிரீஸ் தேசத்து ஓர் ராஜஸ்திரி; இரதியைப்போல் பேரழகுடையவள். ஜிப்ஸிகள்:—நாடோடியாய்த்திரியும் ஜாதியார்; குறச்சாதியைப்போல் கறுத்த மேனியர்; குறிசொல்லல் முதலியவற்றாற் பிழைப்பவர்.

தணிப்பதற்கு நாடகம்ஒன்றுமில்லையோ? பிலாஸ்ட்ரோட்டைக் கூப்பிடு.

பிலாஸ்ட்ரோட்.—பராக்கிரமமுள்ள தீஸியுஸ்ஸே, இதோ இருக்கிறேன்.

தீஸியுஸ்.—பொழுது போக்கிற்கு என்ன நாடகம் கைவசத்தில் வைத்திருக்கிறாய்? வேஷக்கூத்தோ, பாட்டோ என்ன இருக்கிறது? இப்படிப்பட்டது ஒன்றுமில்லாவிடில் நாம் பொழுதுபோக்குவது எப்படி?

பிலாஸ்ட்ரோட்.—இன்ன இன்ன வேடிக்கைகள் சித்தமாயிருக்கின்றன வென்பது இச்சுருக்கத்திற் குறிக்கப்பட்டிருக்கிறது. இவற்றில்முதலிற் காணவிரும்புவது இன்னதென்று அருளிச்செய்ய வேண்டுகின்றேன். (சுருக்கத்தைக் கொடுத்தல்.)

தீஸியுஸ் —(படித்தல்)*"ஸென்டார்ஸோடு ஹொர்க்யுலிஸ் செய்த போரைப்பற்றிய பாட்டை ஆதென்ஸ் நபும்ஸகன் ஒருவன் ‡சுரமண்டலத்தில் வாசித்தல்" இது வேண்டுவதில்லை; என் இனத்தானாகிய ஹொர்க்யுலிஸின் இவ்வெற்றிப்பாட்டை என் காதலிக்குச் சொல்லியிருக்கிறேன். (படித்தல்) †"குடிகாரப்பெண்கள் தம் குடிவெறிக் கலகத்தில் த்ரேஷ்ய தேசத்து சங்கீத வித்வானுடைய குடலைக் கிழித்தல்" இது பழைய ஆட்டம்; நான் 'தீப்ஸ்' நகரத்தினின்றும் வெற்றிபெற்று வரும்பொழுது ஒருமுறை ஆடப்பட்டது. (படித்தல்) "ஒரு பெரிய கவி வறுமையால் இறந்ததற்காக * ஒன்பது கலைமகளும் புலம்பல்." இது கடுமையான வசைப்பாட்டு; நமது விவாககாலத்துக்கு ஒத்ததன்று. (படித்தல்) "பிரமஸ்ஸையும் அவன் நேசிக்கும் திஸ்பியையும் பற்றியதான நீண்ட சிறுகாட்சி, துக்க மகிழ்ச்சி." மகிழ்ச்சி, அது துக்ககரமானது! நீண்டதும் குறுகியதும்! சூடுள்ள பனிக்கட்டி என்பதுபோலிருக்கிறது. இவ்வொவ்வாதனவற்றுள் நாம் பொருத்தங்காண்பதெப்படி?

பிலாஸ்ட்ரோட்.—என்னாண்டவனே, இஃது ஒரு கூத்தின் பெயர்; பெயரோவெகுநீளம்! இரசமில்லாத கூத்திது. கூத்து முழுவதிலும் சொற்பொருத்தம் ஒன்றேனுமில்லை. அது துக்ககரமானதுதான்; ஏனெனின், பிரமஸ் தற்கொலை செய்துகொள்ளுகிறான்; அதை அவர் 'ஒத்திகை' பார்க்கும்பொழுது கண்டேன். அப்பொழுது நான் சிரித்த சிரிப்பால் எனக்குக் கண்ணீர் வந்துவிட்டது.

தீஸியுஸ்.—இதை ஆடுபவர்கள் யார்?

பிலாஸ்ட்ரேட்.—வேலை செய்துசெய்து கை உரங்கொண்ட இந்நகரத்துக் கைத்தொழிலாளிகள்; அவர்கள் இதுவரையில் மனத்தால் வேலை செய்தே அறியார். உம்முடைய கலியாணத்தன்றிரவில் இக்கூத்தை ஆடவேண்டுமென்று தமக்குப் பழக்கமில்லாத காரியத்திலிறங்கி அதில் மிகவும் வருந்தி உழைத்திருக்கிறார்கள்.

தீஸியுஸ்.—நாம் அதைக்காண்போம்.

பிலாஸ்ட்ரேட் —வேண்டுவதில்லை, என் உயர்குலத்தலைவ. இது நீர் காணத்தகுந்ததன்று. நான் முழுவதுங்கேட்டேன். அதில் ஒன்றுமில்லை. ஆனால், உமக்குத் தங்களாலியன்ற உபசாரம் செய்யவேண்டுமென்று மனப்பூர்வமாயெண்ணி எத்தனையோ படாத பாடெல்லாம்பட்டு அவர்கள் அக்கூத்தைப் பாடஞ்செய்திருக்கிறார்கள். இதை நினைத்து ஒருவேளை நீர் அவர்கள் கூத்தைப்பார்க்க விரும்பலாமேயன்றி மற்றைப்படி அக்கூத்தில் ஒன்றுமில்லை.

தீஸியுஸ்.—அக்கூத்தை நான் அவசியம் காண்பேன். கபடமற்றுத் தம் கடமையைச்செலுத்துவோர் செய்வதொன்றுந் தப்பாகாது. ஆதலின் நீ அவர்களை இங்கு அழைத்துவா. மாதர்களே, நீங்கள் உங்களிடத்தி லிருங்கள். (பிலாஸ்ட்ரோட் போதல்.)

ஹிப்பாலிடா.—மனப்பூர்வமாய்த் தம் கடமையைச் செலுத்தவெண்ணும் பேதை ஜனங்கள் தங்கள்வன்மைக்கு எட்டாதகாரியத்தைத் தொடங்கி அதிற் கஷ்டப்பட்டுத் தப்பிப்போவதைப்பார்க்க எனக்கு விருப்பமில்லை.

தீஸியுஸ்.—என் மதுரமே, அப்படியொன்றுமிராது.

ஹிப்பாலிடா.—ஆட்டத்தில் அவர்களுக்கு ஒன்றுந்தெரியாதென்று அவன் சொன்னானே.

* ஸென்டார்ஸ்-என்பவர்கள் மலைநாடர்; குதிரையேற்றத்தில் வல்லவர். ஹொர்க்யுலிஸ்.—பீமஸேனனைப்போல் அதிபலவான்.

‡ சுரமண்டலம்-ஓர்வகை வாத்தியம்.

† த்ரேஷ்ய தேசத்தானாகிய ஸங்கீத ஸாஹித்ய வித்வான், 'ஆர்பியஸ்' என்பவன் கல், மரம் முதலியனவும் உருகும்படி பாடுந்திறமையையுடையவன்; தன் மனைவியை இழந்தபின், பெண்பாலோர் கூட்டத்தையே துறந்திருந்ததற்காக இவ்வகை மரணமடைந்தான்.

தீஸியுஸ்.—அவர்கள் ஒன்றுஞ்செய்யாதபொழுது அவர்களுக்கு பிரியவசனம் சொல்வது தான் நமது அதிக அன்புடைமையைக்காட்டுவது. அவர் செய்யுந் தப்புக்களை அறிந்து நாம் சந்தோஷிக்க வேண்டும். மனப்பூர்வமாய்க் கடமை செலுத்துவோன், திறமைக்குறைவால், செவ்வையாய்ச் செய்து முடிக்காத காரியத்தை மேன்மக்கள் அக்காரியத்தின் முடிவுக்குத்தக்கபடி மதிக்காமல் அதைச்செய்தோனுடைய அளவுக்குத் தக்கபடி மதிப்பார்கள். நான் போய்க்காணு மிடங்களிலெல்லாம் கற்றறிந்த பெரியோர் அநேகர், எனக்கு நல்வரவுகூறி உபசார வார்த்தைகள் சொல்வதற்கெண்ணி இன்னது சொல்வதென்று முன்புதானே யோசித்து நிச்சயஞ்செய்து வைத்துக்கொள்வதுண்டு. அவ்வாறு நிச்சயஞ்செய்து கொண்டதைச் சொல்லியபொழுது அவர்முகம் வெளுத்து விடவிடென நடுங்கியதையும், வாக்கியத்தினிடையில் தாறுமாறாய் நிறுத்தியதையும், பயத்தால் வழக்கமாயுள்ள உச்சரிப்பை யிழந்து வார்த்தை எழும்பாமல் தொண்டை யடைபட்டு முடிவில் நல்வரவு கூறாமலே ஊமைபோல் நின்றதையும், எத்தனையோ முறை கண்டிருக்கிறேன். என் இன்பமே, இச்சமயங்களில் அவர் மௌனமே எனக்கு நல்வரவுகூறி எல்லா உபசாரமும் செய்ததாக நான் எண்ணுதல் வழக்கம். பயந்து தம் கடமையைச் செலுத்துவோரின் மௌனமானது, தழுதழுப்பின்றித் தைரியத்தோடு வரும் சொல்வன்மையுள்ள மொழியால் தெரிவிப்பதுபோல் என்னிடத்து அவருக்குள்ள பக்தியையும் அன்பையும் செவ்வையாகத்தெரிவிக்கின்றது. ஆதலின், என் அன்பே, பேசமாட்டாத நிஷ்கப்படியின் ஸ்வற்பப் பேச்சில் அதிகப்பேச்சின் பொருளிருக்கிறதென்பது எனது கொள்கை.

(இன்னும் வரும்,)

எஸ். நாராயணசாமி அய்யர், பி. எ.

---

## ஹிந்துக்களின் க்ஷயகதி.

### 5-வது தேஜஸ் க்ஷயம்.

நமக்குள் நாளுக்குநாள் தேஜஸ் க்ஷயம் உண்டாகி வருகிற தென்பதில் சந்தேகமில்லை. தேஜஸ் என்பது பொதுவாய்ச் சரீரத்திலும் முக்கியமாய் முகத்திலும் விளங்குங் காந்தி. இதுவன்றி, தேஜஸ் என்பது இந்திரியங்கள் கருவி கரணாதிகள் இவைகளை அடக்கி மனோவியாபாரங்களை அந்தர் முகமாய் ஒரு முனைப்படுத்தி இச்சா சக்தியை தன் வசப்படுத்திப் பயின்றுவரும் தபோ முயற்சியால் ஏற்படும் விசேஷ சக்திக்கும் பெயர். இவ்வகை விசேஷ சக்தி விளங்குமிடத்தில் சரீர காந்தியும் முகக்காந்தியும் உண்டாவதுஸஹஜந்தான். மனோநிக்கிரகம் செய்து இச்சாசக்தியை தன் வசப்படுத்திப் பயின்றுவரும் தபோ சக்தியினால் வரும் விசேஷசக்தியை இவ்விடத்தில் விஸ்தாரமாய்ப் பிரஸ்தாபிக்க நான் உத்தேசிக்கவில்லை. ஆனால் தபோ விருத்தியில் மனோ நிக்கிரகமும் இச்சா சக்தி பிரத்தியாகாரப்படுவதும் ஏற்படுவது போலப்பூரணமாய் லௌகிக விருத்திகளில் ஏற்படாவிட்டாலும் அதாவது அவசரங்கட்குத் தக்க வண்ணம் பூரணக்குறைவாய் ஏற்படவேண்டியதும் ஏற்படுவதும் சாதாரணம். ஆகையால் இரண்டையும், ஒருங்கு சேர்த்து உபந்நியாசஞ் செய்யலாம்.

தேஜஸ் இருவகைப்படும். முதலாவது தத்தம் தேஜஸ்; இரண்டாவது, தத்தம் ஜாதிக்குள் அனேகரை உத்தேசித்து ஒருவனிடத்தில் விளங்கும் விசேஷ தேஜஸ். விசேஷ தேஜஸானது புத்தி முதலிய விசேஷ காரணங்களின் மேல் தங்கினதாக இருந்தாலும் ஜாதி தேஜஸானது ஒவ்வொருவனிடத்திலும் இருக்கவேண்டும். முற்காலத்தில் லக்ஷம் பத்து லக்ஷமாகக் கூடியிருக்கும் கீழ் ஜாதிக்காரர்க்குள் ஒரு பிராமணன் இருந்தாலும் அப்பிராமணனைப் பிரத்தியேகமாய்ச் சுட்டிக் காட்டக்கூடும். தற்காலத்தில் அநேக பிராம்மணர்களிடத்தில் பிராம்மண தேஜஸிருந்தாலும், சிலப் பிராமணர்களை அவ்வாறு தெரிந்தெடுப்பது அசாத்தியம், கோர்ட்டுகளில் கைகூப்பி நமஸ்காரம் சொல்லும் சில பிராம்மண சாக்ஷிகட்கு நமஸ்காரம் சொல்கிறதா ஆசிர்வாதஞ் சொல்கிறதா வென்று வெகு சங்கடப்பட வேண்டியிருக்கிறது. இதற்குக்காரணம் இவர்களின் முகத்தில் தத்தம் ஜாதி தேஜஸ் விளங்காமைதான். பிராம்மணர்களிற்சிலர்க்கு எப்படி ஜாதிதேஜஸ்

மங்கிப்போயிருக்கிறதோ அப்படியே மற்றஜாதிகளிலும் ஜாதி தேஜஸ் மங்கிப்போயிருக்கிறது. மலையாளத்தில் இவ்வகைக்குழப்பம் அதிகம்.

ஜாதி தேஜஸ் என்பது சாதாரணமாய் பாரம்பரியத்தைப்பற்றி உண்டாகிறது. பாரம்பரியம் விட்டு விலகும்போது ஜாதி தேஜஸ் மங்கும். மேல்ஜாதிப் பெண்ணிடம் கீழ்ஜாதி ஆண் சேரும்போது பாரம்பரியம் விலகி ஜனிக்கும் சந்ததிக்குத்தாழ்ந்தஜாதிதேஜஸ்ஸாவது கலப்பு தேஜஸ்ஸாவது உண்டாகிறது. தாழ்ந்த ஜாதிப் பெண்ணிடம் மேல்ஜாதி ஆண் சேரும்போது அதின் மூலம் உண்டாகும் சந்ததிகட்கு மேல்ஜாதி தேஜஸ்ஸாவது, தாழ்ந்த ஜாதி தேஜஸ்ஸைக் காட்டில் உயர்ந்ததும், மேல்ஜாதி தேஜஸ்ஸைக் காட்டில் தாழ்ந்ததுமான கலப்பு தேஜஸ்ஸாவது உண்டாகிறது. இம்மலையாளத்தில் சூத்திர ஸ்திரீகட்கு சம்பந்தம் பெரும்பான்மையும் பிராம்மணரும் க்ஷத்திரியரும் ஆகையால் இங்குள்ள சூத்திர ஜாதிகட்கு தேஜஸ் கிட்டமுட்ட பிராம்மண தேஜஸ்ஸுக்கு சமமாயிருக்கிறது. அல்லாமலும் இந்தராச்சியத்து சூத்திரர்களுக்கு பிராம்மண ஆசாரங்களும், இருகால் ஸ்நானம், சுத்த வஸ்திர தாரணம், தர்மசித்த விருத்தி, தெய்வ பிராமணபக்தி இவைகள் ஏற்பட்டிருப்பதாலும் தேஜஸ் அதிகரிக்கும்படியான காரணமும் ஏற்பட்டது. இந்த ராச்சியத்தில் தற்கால சூத்திர ஸ்திரீகள் தாழ்ந்த ஜாதி சம்பந்தம் உபேக்ஷிக்கிற தில்லை. அதனாலும் பிரவிருத்தி தோஷத்தாலும் அநேக சூத்திரர்க்கு தேஜஸ் மங்கியிருக்கிறது. நன்றாய்ப் பார்க்குமிடத்து சில திருஷ்டாந்தங்களில் ஒரு நம்பூரிக்கும், போற்றிக்கும், இளையது மூத்தது, புஷ்பகன், வாரியர், சூத்திரன், திருவாப்பாடு இவர்கட்கும் வித்தியாசம் சொல்ல முடியாத மாதிரி சம ஸ்திதி வந்திருக்கிறது.

சகவாசத்தாலும் ஜாதி தேஜஸ் குறையக்கூடும். சூத்திரரோடு அதிகம் ஊடாடிவரும் பிராம்மணர்களும் மாப்பிள்ளை முதலியவர்களோடு ஊடாடிவரும் சூத்திரர்களும் இவ்வாறு தேஜஸ்க்குறைவு பெற்றிருக்கிறார்கள். நமது தேசத்தில் பட்டிக்காடுகளிலுள்ள பிராம்மணரையும், *மாப்பிள்ளை, துலுக்காள் இவர்கட்குள் அதிகம் ஊடாடிவரும் சூத்திரரையும் கண்டால் இது விசதப்படும்.

சூத்திரர்க்குள்ளும் பல வகுப்பிருப்பதால், ஒரு வகுப்பைச் சேர்ந்தவர் தன் வகுப்புவிட்டு அந்நியவகுப்பார் அதிகம் உள்ள திக்கில் அவர்கள் மத்தியில் ஊடாடி வரும்போது அவர்க்கு தன் வகுப்பு தேஜஸ் மங்கி அந்நிய வகுப்பு தேஜஸ் வந்து விடுகிறது. பாண்டியிலிருந்து மலையாளத்தைச் சேர்ந்த தொடுபுழையில் குடியேறியிருக்கும் சைவவேளாளர்களைப் பார்த்தால் மலையாள சூத்திரரைப்போல் காணப்படுகிறார்கள்.

துர்நடத்தையுள்ள விதவைகள் மேல்ஜாதிக்காரராக்கூடி பிள்ளை பெற்றாலும் அப்பிள்ளையை அவர்கள் எறிந்துவிட்ட மூலை முடுக்குகள் புதர்கள் பள்ளத்தாக்குகளிலிருந்து எடுத்து கீழ் ஜாதிக்காரர் வளர்க்கும்போது கீழ் ஜாதி தேஜஸ் அப்பிள்ளைக்கு வந்து சேர்கிறது. ஜெனனத்தால் அதிகம் கிடைத்த மேல்ஜாதி தேஜஸ்ஸானது கீழ்ஜாதி சகவாசத்தால் முற்றிலும் மறையாமல் கொஞ்சம் விளங்குவதும் சாதாரணந்தான்.

பூசார ஜலசார வித்தியாசத்தாலும் ஆகார வித்தியாசத்தாலும் ஜாதி தேஜஸ் மங்கக்கூடும். மலையாளத்திற் குடியேறி யிருக்கும் பரதேசப் பிராமணர்களையும் பரதேசத்திற்றானே ஸ்திரமாகவிருக்கும் பிராமணர்களையும் பார்க்கும்போது இந்தச் சங்கதி தெளிவாய் விளங்கும்.

மலையாளத்தில் வியாபார சம்பந்தத்தால் மலையாள வழக்கம் ஆசாரத்தில் பெற்றிருக்கும் திருநெல்வேலி பிராமணர்கட்கும், பாலக்காட்டு பிராமணர்கட்கும், மதுரை, திருச்சினப்பள்ளி, தஞ்சாவூர் முதலிய ஜில்லாக்களிலுள்ள பிராமணர்கட்கும் எவ்வளவோ தேஜஸ் பேதமுண்டு.

ஸ்வஜாதி விருத்திமாறி அந்நியஜாதி விருத்தி ஏற்படுவதாலும் தேஜஸ் மாறக்கூடும். சில கைக்களர் விருத்தி பேதத்தால் சைவரைப்போற் காணப்படுகிறார்கள். தட்டாரைப்போலும் செட்டிகளைப்போலும் காணப்படும் பிராமணர்கள் விருத்திபேதத்தாலும் ஒழுக்கபேதத்தாலும் அவ்வாறு காணும்படி க்ஷயப்பட்டவர்களே.

* மாப்பிள்ளைகள் என்பவர் மலையாளத்திலுள்ள ஒருவகை ஜாதியார் (Moplahs.)

ஒழுக்கத்துக்கும் சரீர தேஜஸுக்கும் சம்பந்த முண்டென்பதில் சந்தேகமில்லை. சாஸ்திர பரிஞ்ஞானத்தோடு வைதீக விருத்தியாய் ஜெபமும் தபமும் முயற்சியாயுள்ள ஒரு பிராமணனுடைய தேஜஸ்ஸுக்கும் தந்ததாவனமில்லாமல் பிராதக்கால ஸ்நானமில்லாமற் செந்துளியும் எண்ணெயழுக்கும் பிடித்து மூன்று மயில் நாறும்படிக்கு ஊத்தைவாயும் உடல் வீசுக் துர்மணமுமாய் ஜெபதபங்குன்றி கைதவமே காரியமாகக்கொண்டு அகாலத்தில் தோலியுங் குப்பையும் கலந்த அசுத்த ஆகாரந்தின்று மனதெப்போதும் ஆபரணத்திலும் திரவியத்திலும் பற்றி நின்று சகவாசம் கேவலமாய் நிற்கும்பிராமணன் தேஜஸுக்கும், அஜகஜாந்தரம் வித்தியாசமுண்டென்று அனுபோகத்தால் தெளிவாகக்கூடும். அனுசாரமாயும் அதர்மமாயும் லௌகிக தோரணையாயும் நடக்கும் ஜனங்கட்கு சில திருஷ்டாந்தங்களில் ஆபரணாதிகள் புஷ்டியாய்ப் பெருகுவது நிமித்தம் அனுசாரமும் அதர்மமும் லௌகிகதேட்டாளமும் பெரிதென்றெண்ணி ஆரிய ஒழுக்கங்கள் மாறி கேவலம் நீசர்களுடைய பிரவிருத்திபோல் நடப்பதால் தேஜஸ்குறைவுண்டாகிறது. சில அறிவிலிகள் கண்டது காக்ஷியென்ற இருண்ட சித்தாந்தத்தின்மேல் முன்பின் பாராமல் சந்துபொந்துகளிற் பிரிந்து மலஜல விசர்ஜனமில்லாமல் பிரவிருத்தித்து இரத்தபுஷ்டி யெல்லாம் இழந்து கார்மேகம் பிடித்து நிறம்மங்கி ஒளிமங்கி க்ஷயப்பட்டுவருகிறார்கள். நகைப்புஷ்டியும் பணப்புஷ்டியும் பெற்றவர்கட்கு பெரியவன் பெரியவள் என்ற பேர் சார்வதுடன் வேகடை சுபாவமும் ஏற்பட்டுத் தான் என்ன செய்தாலும் பாதகமில்லையென்று நினைப்புவந்து விடுகிறபடியால் ஒழுக்கமும் வெகுவாய் மாறி அதனால் தேஜஸ் ஹானியும் வருகிறது. சில வாலிபர்கள் நாடகக் காரரைப் பார்த்து ‡வேகடை சுபாவம்கைப்பற்றி ஆடையாபரணப் பெருமையில் வீழ்ந்து தாசியின்பாதாரவிந்தமே சரணமென்றடைந்து, பொட்டுவளை 'கமான்'வளைவுள்ள குடுமிகளை மரத்திபோல் பின்புறத்தில் வகுத்துச் சொருகிச் சாந்துப்பொட்டிட்டு *சோரையெல்லாம் சுகத்தில் இழந்து மரணச்சாயை தாக்கிய சஞ்சாரப்பிரே தம்போல் வெளுத்து மேகவெக்கையால் அங்கங்கறுத்து கண் ஜீவவொளிமங்கி மார்பெலும்பு விலாவெலும்பு வரைவரையாய் வெளிப்பட்டு ஓர்விதத் தேஜஸ்ஸு மில்லாத மானிடப் பதராகக் காணப்படுகிறார்கள்.

ஹீந்துக்கட்குள் தாழ்ந்த ஜாதிக்காரர்க்குள் அல்லாமல் மேல் ஜாதிக்காரர்க்குள் மத்தியபானம் இல்லாமலிருந்தது. இப்போது நட்த்திவரும் கலால் ஏற்பாட்டாலும் இப்போது கைக்கொண்டு வரும் இங்கிலீஷ் அபிப்பிராயத்தாலும் கட்குடி எல்லா ஜாதிக்காரர்க்குள்ளும் ஏற்பட்டு அவர்களின் தேஜஸைக் கெடுத்துவருகிறது. ஆனால் தெய்வ கடாக்ஷத்தாலும் நம்முடை முன்னோர்களின் தர்ம்ம விதிகளாலும் பிராம்மணர் முதலிய மேல்ஜாதிக்காரரிடம் கட்குடி அவ்வளவு விஸ்தாரப்படவில்லை.

ஆகாரக்குறைவாலும் தேஜஸ் க்ஷயம் வரக்கூடும். செயலற்றவன் செயலுறும்போதும் செயலுற்றவன் செயலற்ற போதும் அவனிடம் விளங்கும் தேஜஸ் வித்தியாசம் இதற்கு அத்தாக்ஷி. பம்பாய்ப் பசுங்கன்றுகளை இத்தேசத்தில் வாங்கிவளர்ப்பவர்கள் அவைகட்குத் தகுந்த இரை கொடுக்காமல் ஜீவன்குன்றி ஒளி கெடும்படி செய்திருக்கிறார்கள்.

குணக்ஷயத்தாலும் தேஜஸ் க்ஷயம் உண்டாகிறது. இவ்வகை க்ஷயகதியால் பரோபகாரம் சத்தியம் முதலிய மேன்மையான குணங்கள் விலகி சுவயகாரிய புத்தியும் அற்பத்தனமும் பிடித்து புருஷத்தன்மைக்கு விபரீதமாய் நடத்தையுண்டாவதால் நாளுக்குநாள் முகத்தில் விளங்கும் ஒளி மழுங்கி பாம்பும் தேளும் முண்டும் முரடும் அடர்ந்த இருட்டுக் குகைபோல் வஞ்சனையாலும் காமக்குரோதாதியாலும் மனம் மழுங்கி, தேஜஸ் க்ஷயமுண்டாகிறது.

வழக்கபேதமும் தேஜஸ்ஹானி வருத்தும். காப்பி, மாம்சம், ரொட்டி இவைகள் நூதனமாய்ச் சேர்த்து வரும் அநேகர்க்கு உஷ்ணதிக்கத்தால் உடல் வெளுத்து நிறம் நலப்பட்டாலும் தேஜஸ் மங்கியிருப்பதைப் பார்க்கக்கூடும்.

ஒரே குடும்பத்தில் ஒழுக்கம் பேதப்பட்டிருக்கும் இருவர்க்கு தேஜஸும் பேதப்பட்டிருக்கிறது வெகு சாதாரணமாய்க் காணலாம்.

‡ வேகடம்=யௌவனம்.
* ஜோர் (ஹிந்துஸ்தானிவார்த்தை)=பலம்.

ப்ல ஜாதிக்காரர் ஒருங்கு சேர்ந்து பயில்வதால் அவர் அவர்க்குள்ள தேஜஸ் கைமாறி தேகத்தில் கலந்து சற்று க்ஷயப்படக்கூடும். ஆனால் இந்த அற்ப தீங்கை உத்தேசித்து அவ்வகை யேற்பாட்டைக் கைவிடக்கூடாது.

உசிதமில்லாத விவாகத்தாலும் பாலிய விவாகத்தாலும் தேஜஸ்ஹானி வரக்கூடும். அரும்பைக் கசக்கினால் நல்லபுஷ்பமாகுமா? தேகத்தில் ஜீவகாந்த சக்தி புஷ்டியாயிருக்கும்போது ஜனிக்கும் சந்ததிகட்கு தேஜஸ் அதிகமாயிருக்கும். அவ்வகை சக்தி குறைந்த காலத்தில் ஜனிக்கும் சந்ததிகட்கு தேஜஸ்குறைவாயிருக்கும். ஜீவகாந்த சக்தி தேகத்தில் அதிகப்படுவது அரோகத்தாலும், ஆரோக்கியத்தாலும், பிரமசரியத்தாலும், சுத்த விருத்தியாலும், திடசித்தத்தாலும், நிஷ்களங்க தர்ம்மபுத்தியாலும், சகவாச விசேஷத்தாலும், மனம் தன் வசப்படலாலுமாம். இவ்வகைக் காரணங்கட்கு ஹானிவராமல் பாதுகாக்கும்போது ஜீவகாந்த சக்தி புஷ்டியாய் உத்பத்தியாகி வீரியத்தோடு கலந்து தேஜஸ் விளைவிக்கும். மலஜலபந்தங்கள் ஜீவகாந்த சக்தி பெருகுவதற்கு விரோதம். இதனாற்றான் மாதாவயிற்றில் மலங்கட்டி நிற்கும் காலத்தில் பிண்டோத்பத்தி யாகும்போது அப்பிண்டம் மந்தமாயிருக்குமென்று திருமூலர் கூறியிருக்கின்றார்.

ஜாதிக்கலப்பால் தேஜஸ் தோஷம் வருகிறதென்று அபிப்பிராயப் படுவதில் ஐகமத்தியமின்றி பலஜாதிக்காரர்களும் பின்னப்பட்டு கெட்டுப்போக வேண்டுமென்று சொல்ல வரவில்லை. ஜாதிபேதத்தால் ஐகமத்தியக் குறைவும் இணக்கக் குறைவும் நேரிடவேண்டிய நிர்ப்பந்தமில்லை. மோக்கம் பொது க்ஷேமத்தைப் பற்றியும், வர்ணாச்ரமப்படி ஒழுக்கமும் நின்றுவிட்டால் இணக்கமும் பிராதருத்வமும் பூரணமாய் ஏற்பட்டு தேஜஸ் ஹானிப்படமல் விருத்தியாகக்கூடும். பொது க்ஷேமத்திற்கு வேண்டியகாலங்களில் நானாஜாதியும் ஒருங்கு சேர்ந்து பிரவிருத்திப்பதற்குத் தடையில்லை. ஆபத்காலத்தில் ஊண்கலக்கும்படி கூட மனுஸ்மிருதியில் அநுவதிக்கப்பட்டிருக்கிறது. பூரண யோஜனையில்லாத சிலர் ஜாதி பேதத்தால் இந்துக்கள் இந்து தேசத்தை இழந்துவிட்டதாகச் சொல்கிறார்கள். இந்து தேசம் வெள்ளைக்காரர்க்குள்ளானது ஜாதிபேதத்தால் அல்ல. வருணாச்ரம தருமங்களின்பேர் வைத்துக்கொண்டு தாழ்ந்த ஜாதிகட்கு இடுக்கண் வருத்தக்கூடாது. சண்டாளன் முதல் பிரவிருத்தி சுத்தியாலும் ஒழுக்க மேம்பாட்டாலும் சீர்திருத்தம் அடையும்போது மேல்ஜாதிக்காரருடைய சுதந்தரமெல்லாம் யோக்கியதைபோலும் விட்டுக் கொடுப்பதில் தடையில்லை. பறையன் வித்வானால் பிரம்மரிஷிபோல் பூஜிக்கப்படுகிறான். ஏழு தலைமுறை பிராமணவீரியங் கலந்த சூத்திரனை பிராம்மணனென்று சொல்லும்படி மனுஸ்மிருதியில் கூறியிருக்கிறது.

விசேஷ தேஜஸ்ஸுக்குக் காரணம் புத்திக் கூர்மை, ஆகாரவிசேஷம், ஆரோக்கியம், ஒழுக்கம் இவைகள்தான். புத்தி க்ஷயப்படுவதற்குக் காரணம் அநேகம். அவைகள் இன்னதென்று அடுத்தபத்திரிகையில் உபந்நியாசிக்கப்படும். சாதாரண ஜனங்கட்குள் ஊடாடி வரும் உத்தியோகஸ்தனை உத்தியோகஸ்தனென்று அறியாதவன் கூட சீக்கிரமாக நிதானிப்பது உடை நிமித்தமல்லாமல் விசேஷ புத்தி பிரகாசத்தோடு கூடியிருக்கும் சரீர தேஜஸினாற்றான். அக்னியில்லாக்கரி இருள் மண்டி மங்கியும் அக்னியுள்ளகரி தேஜோமயமாயும் இருக்கும் தன்மைபோல், புத்தியும் ஒழுக்கமேம்பாடு மில்லாதவன் மங்கியும், இவை யுள்ளவன் தேஜஸ்வியாகியும் இருக்கிறான். நம்பூரி பிராம்மணர்கட்குள் தேஜஸ்ஹானி வந்திருப்பது புத்தி க்ஷயத்தாற்றான். ஓத்தில்லா(வேதாத்தியயனம் இல்லா) நம்பூரிகளைக் காட்டில் ஓத்துள்ள நம்பூரிகள் எவ்வளவோ தேஜஸ்விகளாயிருக்கிறார்கள்.

ஆகாரயோக்கியதைக் குறைவால் தேஜஸ் குறைவு வரக்கூடும். வெள்ளைக்கார பிரபுக்களுடைய விசேஷ தேஜஸ் ஆகாரமேன்மையால் வருவதென்று 'டார்வின்' என்பவர் அபிப்பிராயப் பட்டிருக்கிறார். பரீக்ஷை கொடுத்து உத்தியோகத்துக்கு வருமுன் சிலர் வெகு தாழ்ந்த ஆகாரம் அருந்தி தேஜஸ்மங்கியிருந்தாலும் பரீக்ஷை கொடுத்து உத்தியோகம் கிடைத்ததுமுதல் ஆகாரசுத்தியும் மேம்பாடும் பெற்று தேஜஸ்ஸும் கூடி பிரகாசிக்கிறார்கள்.

(இன்னும்வரும்.)

எஸ். இராமஸ்வாமிஅய்யர், பி.ஏ., பி.எல்.

## மாதர்மஞ்சரி.

### VI. மேரி ஸோமர்வில் சரித்திரம்.

இம்முறை நமது மாதர்மஞ்சரியில் சேர்க்க எடுத்துக்கொண்டிருக்கும் மாது அவளுடைய சாஸ்திரக்கியானத்துக்கு உலகப்பிரசித்தியாகப்பேர்போனவள். சாஸ்திரக்கியானத்தில் விசேஷப்பிரக்கியாதிபெற்று விளங்கும் அபூர்வமான அங்கிலேயமாது சிரேஷ்டைகளில் இவள் ஒருத்தி. இம்மாது 1780-வது வருஷத்தில் ஜெட்பரோ என்னும் பட்டணத்தில் அவளுடைய சிறத்தையார் வீட்டில் பிறந்தாள். இவளுடைய தகப்பனார் கப்பற் சைனியத்தில் ஓர் உத்தியோகஸ்தராயிருந்தார். 1780ஹ டிசம்பர் மாசத்தில் அவர் தன் மனைவியைவிட்டுப் பிரிந்து பிறதேசங்களில் சேவகத்திற்குப் போக வேண்டி நேரிட்டது. அவருடைய பத்தினி லண்டன்மாநகர் மட்டும் வந்து தன் கணவனை வழியனுப்பிவிட்டு அவளுடைய சுதேசமாகிய ஸ்காத்லாந்துக்குத் திரும்பிச் சென்றாள். சென்றவள் பூரணகருப்பிணியாக விருந்தமையால் ஜெட்பரோவிலுள்ள அவள் சகோதரி வீட்டில் தங்கியிருக்க நேரிட்டது. அச்சகோதரியின் கணவர் பேர் டாக்டர் ஸோமர்வில். அவர்கள் வீட்டில்தங்கியிருக்கையில் இச்சரித்திரத்திற்கு அதிபதியாகிய மேரிபிறந்தாள். டாக்டர்ஸோமர்வில்லுக்கும் அவர் பத்தினிக்கும் பிறந்திருந்த 'உவில்லியம் ஸோமர்வில்' என்னும் அவர்கள் புத்திரனை மேரி இரண்டாம் புருஷனாகப் பின்னால் மணம் புரிந்து கொண்டமையால் இச்சிறத்தையார் சிற்றப்பனை பிந்தி மேரியின் மாமிமாமன் ஆனார்கள். அவள் அவளுடைய அந்திய காலத்தில் குறிப்பிட் டெழுதிவைத்த பண்டைய ஞாபகக் குறிப்புகளில்,தான் தன்னுடைய புருஷன் வீட்டில்பிறந்து அவருடைய தாயாரால் செவ்வெண்ணெய் போட்டுத் தாலாட்டி வளர்க்கப்பட்ட அதிசய சப்பவத்தைக் குறித்தெழுதியிருக்கிறாள்.

மேரி தாய்வழி, தகப்பன்வழி யிரண்டிலும் பூர்வோத்திரமுள்ள நல்ல குலத்திற் பிறந்தவள், அவளுடைய தகப்பனார் *அட்மிரல் பேர்பாக்ஸ் என்பவர் கப்பற் சைனியத்தில் உன்னத பதவியுள்ள அதிகாரம் பெற்றவர். அவருடைய குலம் 'யார்க்ஷயர்' மாகாணத்தில் பேர்போன பூர்வோத்திர முடையது. அக்குலத்தைச் சேர்ந்த ஒருவர் முதலாவது சார்ல்ஸ் அரசன் ஆண்டகாலத்தில், அவ்வரசன் செய்த கொடுமைகளால் தேசத்தில் குழப்பமும் கலகமும் அதிகரித்து, தேச மிரண்டுபட்டு அரசனுக்கும் குடிகளுக்கும் சண்டைகளுண்டான காலத்தில், ஜனங்கள் கக்ஷியிலிருந்து அவர்கள் பக்கத்துச் சைனியத்தில் ஒரு சேனபதியாக நின்று அதிவீரபராக்கிரமம் காட்டிப் பேர்பெற்றவர். இவர்கள் குடும்பத்திற்கும், அமெரிக்கா 'யூனைடெட் ஸ்டேட்ஸ்' என்னும் ஐக்கியமாகாணங்களுக்கு சுவாதீனம் கிடைக்கச்செய்து பிரக்கியாதிபெற்ற தேசாபிமானியும் அவ்வைக்கியமாகாணங்களின் முதல் 'ப்ரெஸிடெண்டு' மாகிய ஜியார்ஜ் வாஷிங்டன் அவர்களுடைய குடும்பத்திற்கும் உறவுண்டு. மேரியின் தாயார் ஸ்காத்லாந்தில் 'சார்டர்ஸ்' என்று பேருள்ள ஒரு பூர்வகுடும்பத்தி லுதித்தவள். அவளுடைய பந்துக்கள் அவர்களுடைய பூர்வோத்திர விசேஷத்தை வெகுவாய்க் கொண்டாடி கர்வம் பாராட்டி வந்தார்கள். மேரியின் தாயாராகிய 'பேர்பாக்ஸ்' பெருமாட்டி அவளுடைய அதிசயமான குழந்தையின் எண்ணங்களிலும் அவாக்களிலும் அதிக அனுதாபம் கொண்டவளாகத் தோற்றவில்லை. மேரி அவளுடைய தாய்தகப்பனார்களிடமிருந்து சில உத்தம குணங்கள் படியப் பெற்றிருந்தாள். 'பேர்பாக்ஸ்' பெருமாட்டியிடம் ஸ்காத்லாந்து தேசத்தாருக் கியல்பாயுள்ள சில மூடபக்தியும் அதனால் விளையும் பயங் கொள்ளித்தனமும் பூர்த்தியாக விருந்தபோதிலும், சிலவிதங்களில் அந்தம்மாள் அவள் கணவனைப்போல் அவ்வளவு தைரியமுள்ளவளாக விருந்தாள். அந்த அம்மாளுக்கு அவள் புத்திரிசொல்லியபடி "சமயோசித சாமார்த்தியமும், தீராச்சுமையாக வந்துவிட்டால் தைரியம் பாராட்டுந்தன்மையும்" அதிகமாயிருந்தது. ஒரு சமயத்தில் அந்தம்மாள் குடியிருந்தவீடு தீப்பற்றியெரிந்து போம்படியாக மிகவும் பயங்கரமான ஆபத்திலிருந்தது. அவள் வீட்டிற் கருகாமையிலோரிடத்தில் தீப்பற்றிக்கொண்டது. அது நெடுகப்பரவி அவள் குடியிருந்த வீட்டிற்கு

* Admiral Fairfax

ஒரு வீடு விட்டு அடுத்துள்ள வீட்டின் கூறையில் பற்றிக்கொண்டு சுவாலை விட்டெரிந்தது. பக்கத்திலிருந்த வண்டி வேலைச்சாலை யொன்றில் போட்டிருந்த எண்ணெய்ப் பெட்டிகளும் பீப்பாய்களும் தீப்பற்றிக் கொண்டு பிரமாதமாக வெடிக்கத்தலைப்பட்டன. 'பேர்பாக்ஸ்' பெருமாட்டி அவளுடைய வீட்டுப் பண்டங்கள் பர்த்திரங்களையும் குடும்ப தஸ்தாவேஜுகளையும்சேர்த்து நன்றாகமூட்டைகட்டி அவைகளை மேல்மெத்தையி லிருந்து கீழேயிறக்கத் தயார் செய்து அதற்காக வேண்டிய ஆட்களையும் வீட்டில் கூட்டிவைத்துக்கொண்டு, எல்லாம் சித்தமாகவிருக்கப் பார்த்துவிட்டு வீட்டிலுள்ளவர்களைப் பார்த்து "சரி, இப்போது நாமெல்லாரும் சாப்பிட உட்காரலாம், வாருங்கள்; அடுத்தவீடு தீப்பற்றிக்கொண்டு விட்டால் உடனே நமது சாமான்களை யெல்லாம் கீழேயிறக்கிக்கொண்டு போகலாம்," என்று வெகு சாந்தமாகச் சொன்னாள். கடைசியில் அடுத்தவீடு தீப்பற்றிக்கொள்ள வில்லை. அண்டைவீட்டுக்காரர்க ளெல்லாரும் அவசரப்பட்டு 'தடபிடல்' செய்து அவர்கள் வீட்டுச்சாமான்களையெடுத்துத் தெருவிலெறிந்து 'பண்டம் பாடிக' ...லாம் சேதமாகவிண்நஷ்டப்பட்டுப்போக, ...ர்பாக்ஸ்' பெருமாட்டி ஒரு பீங்கானோடும் உடையாமல் எல்லா சாமான்களையும் சாவதானமாகக் காப்பாற்றிக்கொண்டாள். இப்படி ஆபத்து வேளைகளில் சாந்தமான தீரகுணம் காட்டுந்தன்மை தாயைப்போல் பெண்ணிடத்து மிருந்தது பின்னால் பலதடவைகளில் தெரியவந்திருக்கிறது.

பரதேசங்களில் சேவகத்துக்குச் சென்ற 'ஸர். உவில்லியம் பேர்பாக்ஸ்' திரும்பிவர 9-வருஷங்கள் சென்றன. அவர் இல்லாதிருந்த இந்நீண்டகாலத்தில் 'பேர்பாக்ஸ்' பெருமாட்டியும் அவள் குழந்தைகளும் 'எடின்பரோ' நகரத்திற்கெதிரில் கடற்கரை யோரமாயுள்ள 'பர்ன்ட் ஐலண்ட்' என்னும் ஓர் சிறிய கிராமத்தில் வசித்துக்கொண்டிருந்தார்கள். மேரி குழந்தைப் பருவமுள்ளவளா யிருக்கையில் வெளியிலும் வாசலிலும் ஓடித்திரிந்து, படிப்பு என்பது இல்லாமல், துஷ்டத்தனம் செய்வதில் காலத்தைக் கழித்துவந்தாள். புஸ்தகவாசிப்பு ஒன்று மில்லாவிட்டாலும் அவள் துஷ்டத் தனமாக ஓடித் திரிந்து விளையாடுகையில் கடற்கரையோரத்தில் கிளிஞ்சல்கள், ஓடுகள், கடற்பாசிகள் முதலானவைகள் பொறுக்கிவந்ததும், ஆகாயத்தில் சுயேச்சையாகப் பறக்கும் பக்ஷிகளையும் அவைகளின் செய்கைகள் குணவிசேஷங்களையும் பார்த்து நின்றதும், அவள் படுக்கை யறையிலிருந்து பலகணிவாய் வழியாக இராக்காலங்களில் ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களைப் பார்த்து வந்ததும், அதிசய மனோசக்தியுள்ள இக் குழந்தைக்கு வாஸ்தவத்தில் வித்தியாப்பியாச மாகவே யிருந்திருக்க வேண்டு மென்பதற் கையமில்லை. ஆயினும் அவள் தகப்பனர் 9-வருஷகாலங் கழித்து கடல் யாத்திரையி லிருந்து திரும்பி வீட்டிற்கு வந்தபொழுது மேரி தான் கண்டு திகைக்கத் தக்க "அவ்வளவு சிறு துஷ்டையாக" விருப்பதைக்கண்டு உடனே அவளை ஒரு பள்ளிக்கூடத்திற் கனுப்பத் தீர்மானித்தார். மேரியை வாசிக்க அனுப்பிய பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் வீட்டிலே பள்ளியிற் படிக்கும் குழந்தைகளெல்லாம் சாப்பிட்டுக்கொண்டு வாசித்து வருவது வழக்கம். அப்படியே மேரியும் ஒருவருஷ காலம் அப்பள்ளிக்கூடத்தி லிருந்தாள். ஓடியாடித்திருந்த உடம்பு தணிந்து இளங்கொடிபோல் வளையும் சுறுசுறுப்புள்ள தேகமுடைய அவளைக் கூட்டி லடைத்தாற்போல் குனிய நிமிர இடமில்லாத விதமாய் ஒரு சட்டத்தில் உட்காரவைத்து பெரிய அகராதி யொன்றைக் கொடுத்து அதைப் பக்கம் பக்கமாய்ப் பாடம்பண்ணி வரச்சொன்னார்கள். அக்காலத்தில் சிர் பெற்ற அங்கிலேய நாட்டிலும் பெண்பாடசாலைகளில் சொல்லிக்கொடுக்கப்பட்ட படிப்பு இதுதான். இவ்விதப்படிப்பு மேரி மனதில் சிறிது மேறவில்லை யென்று நாம் சொல்லத் தேவையில்லை. ஒருவருஷம் கழிந்ததும் பெண்ணை வீட்டிற் கழைத்துக்கொண்டு வந்தார்கள். அந்த ஒரு வருஷகாலம் அவள் பள்ளிக்கூடத்திலிருந்ததில் கற்றுக்கொண்டது ஒன்றுமில்லை. மேரியின்தாயார் இவ்வளவுபணம் செலவழிந்ததும் வீணகப் போயிற்றே யென்று கோபித்துக் கொண்டாள். மேரிக்கு எழுத, வாசிக்கவும், கணக்கு வைத்துக்கொள்ளவும் மட்டும் தெரிந்திருந்தால் போதும்; அவள் தாயார் திர்ப்தியாயிருந்திருப்பாள். அக்காலத்தில்

அங்கிலேய நாட்டிலும் ஸ்திரீகளுக்குத் தெரிய வேண்டியதாக எதிர்பார்க்கப்பட்ட படிப்பெல்லாம் அவ்வளவு தான்.

பள்ளிக்கூடப்படிப்பு இப்படி முற்றும் பிரயோசன மற்றுப்போனபின் மேரி தானுகக்கற்க ஆரம்பித்தாள். இப்படி 11-வது வயதில் அவள் தானுகக்கற்க ஆரம்பித்த கல்விப்பயிற்சியானது அவளுடைய 92-வது வயதில் அவளிறந்ததோடு தான் முடிவுக்கு வந்தது. அவள் பக்ஷிகள், மிருகங்கள், மீன்கள், செடிகொடிகள், கடற்பாசிகள் இவைகளைப்பற்றி தானறியக் கூடியவை யெல்லாவற்றையும் கற்றறிந்து கொண்டதன்றி அவள் கையிலகப்பட்ட ஷேக்ஸ்பியர் மகாகவியின் புஸ்தகமொன்றை வைத்துக்கொண்டு, தான் தனியாக ஒழிந்திருக்கக் கூடிய வேளைகளிலெல்லாம் அதை வாசித்துவந்தாள். இப்படி நாளடைவில் தன்முயற்சியால் விர்த்தியடைந்து கொண்டு வருகையில் அவளுடைய தாயார் தன் குழந்தைகளுடன் எடின்பரோ நகரத்துக்குக் குடிப் பெயர்ந்து சென்றுள். அங்கே மேரி ஒரு சங்கீத வித்வானிடம் பாடங் கற்றுக்கொண்டாள். அதோடு தானே லத்தீன் பாஷையும் கொஞ்சம் கொஞ்சம் கற்றுக்கொண்டாள். கல்விப் பயிற்சியில் அவளுக்கு சுபாவமாக விருந்த மனச்சார்பு முற்றும் இப்பொழுது வெளிக்காண ஆரம்பித்து விட்டது. ஆனுல் அவள் 14-வயதுடையவளாகும் வரையில் படிப்பு விஷயத்தில் அவளுக்கு ஒரு வார்த்தை சொல்லி உற்சாகப்படுத்தினவர்கள் ஒருவருமில்லை. அவளுடைய 14-வது வயதில் அவள் தான் பிறந்த வீட்டுக் கதிபர்களாகிய ஜெட்பரோவிலுள்ள தன் சிறியதாய் சிற்றப்பனைக்காணச்செல்லும் பாக்கியம் பெற்றுள். அவளுடைய சிற்றப்பா டாக்டர் ஸோமர்வில் என்பவர்தான் அவள் படிப்பு விஷயத்தில் அவளுக்கு முதல் முதல் ஒத்தாசை செய்து உற்சாகப்படுத்தினவர். மேரி தான் லத்தீன்பாஷை கற்றுக்கொள்ள முயற்சித்துவருவதையும் அவள் முயற்சி பிரயோசனப்படாதுபோ விருப்பதையும் இரகசியமாய் அவரிடம்சொல்லத்துணிந்தாள். அவர் அதைக்கேட்டு, அவளுக்குத் தைரியங்கூறி, முற்காலத்தில் ஸ்திரீகள் பூர்வ பாஷைகளிற் கற்றுத்தேறிய விற்பன்னர்களாயிருந்ததைப்பற்றிச் சொல்லி அவளும் ஊக்கத்தைக்கைவிடாமல் படித்து வந்தால் லத்தீன் பாஷையில் தேர்ச்சியடையச் சந்தேகமில்லையென்றுரைத்து அவளை உற்சாகப்படுத்தியதன்றி, தினந்தோறுங் காலையில் 2-மணி நேரம் அவளோடிருந்து வர்ஜில் என்னும் லத்தீன் மகா கவியினது கிரந்தங்களை அவளுக்கு ஒத்தாசையாகப்படித்து வந்தார். இப்படி அவள் லத்தீன் பாஷை கற்றுக்கொண்ட சிலவருஷங்களுக்குப்பின் கிரேக்க பாஷையும் கற்றுக்கொள்ள ஆரம்பித்து காலக்கிரமத்தில் அப்பாஷையிலுள்ள சிறந்த காவியங்களை யெல்லாம் வாசித்துக் கிரகித்துக்கொள்ளும்படியான அவ்வளவு தேர்ச்சியடைந்தவளானுள்.

அவளிடத்தில் காணப்படும் ஒரு ஆச்சரியமான விஷய மென்னவென்ருல் அவளுடைய புத்தி பலவகைப்பட்ட லக்ஷணங்கள் பொருந்தியதாயிருப்பதே. சாதாரணமாகப் புருஷரிலும் சரி, ஸ்திரீகளிலும் சரி, ஒரு விஷயத்தில் மிகத் தேர்ச்சி பெற்றுள்ளவர்கள் மற்ற விஷயங்களில் அவ்வளவாகச் சிரத்தை யெடுத்துக் கொள்வதில்லை. உதாரணமாக சாஸ்திரக்கியானம் முதிர்ந்து சாஸ்திரத்தில் விற்பன்னர்களா யிருப்பவர்கள் சாஸ்திர சம்பந்தமான விஷயங்களைத்தவிர மற்ற விஷயங்களைப்பற்றிக் கவனிக்கிறதில்லை. இது லோகானுபவத்தில் சாதாரணமாய் நாம் காணும் விஷயமாயிருக்கிறது. இவள் விஷயத்திலோ அப்படியில்லை. "வந்ததெல்லாம் கொள்ளும் மகாராஜன் கப்பல்" என்று வழக்கமாய்ச் சொல்லும் பழமொழி அவள் புத்தி விசாலத்திற்கே முற்றும் பொருந்தும். அறிவை அகலச் செய்யும் கலைகள், சாஸ்திரங்களில் எதுவாகட்டும், அவள் சந்தோஷத்துடன் கற்கவிரும்பாதது ஒன்றில்லை. தன் சுயபாஷையன்றி பூர்வ பாஷைகளிலும் அவள் தேர்ச்சியடைய விரும்பி அவள் மனேவிருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டதைப்பற்றி முன்னமே சொல்லியிருக்கிறேம். எடின்பரோ சித்திர சாஸ்திர மகா வித்வான் ஒருவரிடத்தில் அவள் படமெழுதும் வித்தை கற்றுக்கொண்டாள். அவர் இந்த அம்மாள் தன்னிடம் படித்த மாணுக்கர்களெல்லாரிலும் சூடிகையும் சூக்ஷ்ம புத்தியு முள்ளவளாக விருந்தாளென்று சொன்னர். அவள் சா

கும் நாள் வரையில் சித்திர மெழுதுவதிலும் படமெழுதுவதிலும் அவள் சந்தோஷப்பட்டுவந்தாள். சங்கீத வித்தையிலும் கைதேர்ந்தவள். தாபரசாஸ்திரத்திலும் அவள் மகா விற்பத்தியடைந்திருந்தாள். அனேக விஷயங்களில் அவள் அதிக விற்பத்தியடைந்து விளங்கினாலும் வானசாஸ்திரங்கற்பதிலுபயோகமாகும் கணித சாஸ்திரப்பயிற்சிசம்பந்தமாக அவளுடையபேர் விசேஷ பிரக்கியாதி பெற்று உலகத்தாருக்குள் விளங்கும். ஸ்திரீகள் படித்துத் தேறினால் அவர்கள் தங்கள் வீட்டு வேலைகளைப்பார்க்கமாட்டார்களென்று சொல்வோர் இத்தேசத்திலிருப்பது போல் அத்தேசத்திலும் சிலரிருந்தார்களென்று முன் ஓரிடத்தில் சொல்லியிருக்கிறோமே. அக்காலத்தில் பேர்பெற்று விளங்கிய வித்வானும் விவேகவாசாலகருமான 'ஸிட்னி ஸ்மீத்' என்பவர் இவ்வபிப்பிராயத்தை விநோத வார்த்தைகளால் தெரிவித்திருக்கிறார். அவருடைய கருத்தைப் பின்வரும் வெண்பா நன்றாக்த்தெரிவிக்கிறது.

அறிவாந் தருவி னருங்கனியைப் பெண்கள்
அறிந்துண்ணச்செய்திடுவோமாகில்-[1]செறிவர்கும்
ஏற்ற குடும்பத்தி லிருக்குமற் றெல்லார்க்கும்
காற்றே யுண்வாகுங் காண்.

அதாவது பெண்களைப் படிக்க விட்டால் குடும்பத்திலுள்ள மற்றவர்களுக்குச் சோறு அகப்படாதென்பதாம். இப்படி நினைப்பது தப்பென்று ரூபிக்க மேரி ஸோமர்வில் பிரத்தியக்ஷ உதாரணமாக விளங்கினாள். அவள் படிப்பிலும், சாஸ்திரப்பயிற்சியிலும் அதிகபிரீதியுற்று அவற்றில் மிகத்தேர்ச்சி பெற்றவளாயிருந்தது போல் குடித்தனக்காரியங்களிலும் அப்படியே மேலானவளாக் விருந்தாள். சமையல் செய்வதிலும், தையல் வேலையிலும் அவள் கைதேர்ந்தவளாக விருந்தாள். அவள் பர்த்தா விடத்து பக்தியுள்ள மனைவியாகவும், பிள்ளைகளிடத்து பிரீதியும் மன உருக்கமுமுள்ள தாயாகவும், நேசர்களிடத்து உண்மையான விசுவாசமுள்ளவளாகவுமிருந்தாள். பெரும்பான்மையாகத் தாய்மார் தம் பிள்ளைகளை வளர்த்து அவர்களுக்கு வித்தியாப்பியாசம் செய்துவைக்க எவ்வளவு காலம் செலவிடுவார்களோ அதைவிட அதிகக் காலம் செலவிட்டு அவள் தன் பிள்ளைகளுக்கு படிப்புச் சொல்லிக் கொடுத்து வளர்த்து வந்தாள். பிராணிகளிடத்தில் அவளுக்கு அளவற்ற பிரீதியுண்டு. சாஸ்திரக்ஞானம் பெற்றவர்கள் சாஸ்திரப்பயிற்சி செய்யுங்கால் பிராணிகளைப்பிடித்து அறுத்து ஜீவவதை செய்து சாஸ்திர உண்மைகளை யாராய்ந்தறிந்து கொள்வது அவசியமென்று சொல்லி அவ்வாறே நடப்பர். மேரி சாஸ்திரப்பயிற்சியில் அடங்கா ஆசையுள்ளவளாயிருந்தாலும் ஜீவ வதை செய்து சாஸ்திரப் பயிற்சி செய்யும் முறையினால் நடக்கும் கொடுமைகளைக்காண ஜீவகாருண்யம் நிறைந்த அவள் மனது நடுக்குற்றுத் தியங்கியதினால், அவள் எப்போதும் அம்முறைக்கு விரோதமாகவேயிருந்து, ஐரோப்பாகண்டத்தில் விசேஷ அனுஷ்டானத்திலிருந்த அம்முறை இங்கிலாந்திலெங்கும்பரவாதபடி தடுக்கஉழைத்து வந்த ஜீவரக்ஷகசங்கத்தலைவர்களோடு சேர்ந்துழைத்து வந்தாள். பக்ஷிகளிடத்து அவள்பரிபூரண அன்புடையவளென்று முன்னே சொன்னோமே. அவள் படிக்கும்பொழுதும் வேலையாக விருக்கும் பொழுதும் அவளிடத்துப்பழகிய பக்ஷிகள் அச்சமின்றி அவள் தோளிலும் தலையிலும் தத்தித்தத்தி யுட்கார்ந்து விளையாடும். அவள் பூரண விததியாசாமர்த்தியத்தோ டெழுதிய ஒரு பெரிய புஸ்தகத்தின் ஏடுகள் பல, அவளோடு பழகின ஊர்க்குருவி யொன்று அவள் தோளிலுட்கார்ந்திருக்க எழுதப்பட்டனவாம்.

பல வருஷங்கள் முன்பம்பாய்க் கவர்னராயிருந்தகனம் 'மௌன்ட்ஸ்டுவர்ட் எல்பின்ஸ்டோன்' அவர்களோடு மேரி முதல் முதற்பரிச்சயம் செய்து வைக்கப்பட்டபொழுது இருவரும் பேசிக்கொண் டிருக்கையில் இத்தலி தேசத்தில் மைனாக்குருவியைப்பிடித்துக் கொன்றுதின்கிற வழக்கத்தைப்பற்றிப் பிரஸ்தாபம் நேரிட்டது; அப்பொழுது அவர் அதைக் கேட்டதிசயித்து "என்ன! மைனாக்குருவியைச் சாப்பிடுகிறதா!! ஏன், அதைவிட ஒரு குழந்தையைச் சாப்பிடலாமே! நன்றாயிருக்கிறது!" என்று சொன்னாராம். அவர் அப்படிச்சொன்னதனால் அவர்பேரில் அவளுக்கு மனம் பூரித்துப்போயிற்றென்று சொல்லியிருக்கிறாள்.

(இன்னும்வரும்,)

C. V. S.

[1] செறிவு=நிறைவு.

## பொன்விளை நல்லூர்.

### (திரவியசாஸ்திர சம்பந்தமானது.)

---

### 1-ம் அதிகாரம்.—(தொடர்ச்சி.)

#### பணமரியாப் பாமரர்.

நமதுமுதலியார், 'அடடா' இன்று நான் யார்முகத்தில் விழித்தேன். நேற்று இந்தக்காலத்திற் கெல்லாம் 'கல கல' என்று ரூபாயை ஓசைப்படுத்திக் கொண்டிருந்தேனே. ஐயோ அந்த இழவுபண்டாரம் அல்லவோ எனக்கு யமனாய் வந்தான். அவன்நாசமாகத்தான்போவான்'; என்று மனப்பூர்த்தியாய்சபித்துவிட்டு, தன்னைக் காட்டில் துரத்திவந்த தன் விரோதியைப் பார்த்துத் தன் மனதுக்குள்ளேயே 'காட்டில் வந்துவிட்டாலும் எப்படியாவது தப்பி ஊர் போய்ச்சேரலாமே. இந்த நாசகாலன் அல்லவோ என்னை இப்படிக் காட்டுமனிதனுக்கு இரையாக்கிவிட்டான். ஐயையோ! தெய்வமே! இருந்திருந்து காட்டுமனிதன் கையாலா சாகவேண்டும். இன்னும் ஒரு நாழிகைபோனால் நாராயணமுதலி இருந்தது கதையாய்ப்போமே. குழந்தைகள் அண்ணா எங்கே என்று கேட்க அம்மாள் என்ன பதில்சொல்லுவாள்? சுவாமீ, பழனிவேலவா, உனக்கு பாலபிஷேகம் செய்கிறேன். கார்த்திகைப் பட்டினி இருக்கிறேன். காவடி எடுக்கிறேன். எப்படியாவது இந்த ஒரு கண்டத்தினின்றும் என்னை விடுவித்து விடவேண்டுமென்று விம்மிவிம்மி அழுதுகொண்டு 'அடா சண்டாளப்பறைப்பயலே என்னையேனடாஉற்றுப்பார்க்கிறாய். கடன்காரா? என்னைக்கொல்லவந்த உன்னையும் கொல்ல ஒருவன் வந்திருக்கிறான். என் கண் முன்னேயே உன் கழுத்தை நறுக்கி உன்கண் விழிகளைத் தோண்டுவதைப் பார்த்துவிட்டுப் பின்பு நான் என் உயிரை விடுவேன். துரோகி! உனக்கு நான் என்னடா செய்தேன். கோட்டான்போல் விழிப்பதைப்பார். கொஞ்சமேனும் கவலைப்படுகிறானா' என்று சொல்லி முடிப்பதன்முன் அந்தக்காட்டுமனிதன் அவனை சாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டு அவன் கால்களை இறுகத்தழுவிக்கொண்டு 'சுவாமி, என்னை மன்னிக்கவேண்டும். தங்களை என் ஜன்மவிரோதியாகிய வேறொருவனென்றெண்ணி நான் மோசம் போனேன். ஐயோ, ஒருபாவத்தையு மறியாத தங்களை இந்தத்துன்பத்துக்கு ஆளாக்கினேனே! இனி இந்த நாய் சுப்பன் தங்களுடைய அடிமை. என்னை தயவுசெய்து மன்னித்தருளவேண்டும். விசனப்படாதேயுங்கள். ஒரு தீங்கும் செய்யாத நம்மைக் கடவுள் கைவிட மாட்டார்; பார்ப்போம்.' என்று குளிர்ந்த வசனங்களை இனிமையாய்ச் சொல்ல நாராயணன் 'இவன் பார்வைக்குக் காட்டுமனிதன்போல் இருந்தாலும் பேச்சில் அதிக நாகரீக முள்ளவனாயிருக்கிறான். அவன் இனிய முகத்தைப்பார்த்தால் ஏதோ நம்மைப்போல் இவனும் மோசம் போனவன்போலிருக்கிறது. தைரியமும் சொல்லுகிறான்; பார்ப்போம்.' என்று நினைத்து சற்றுகோபமும் துக்கமும் தணிந்து நிற்கையில், சுப்பன், நிர்வாணமாய், நாராயணனுடைய துக்கத்தைக்கண்டு இளகினவள்போல் அதி நளினமான பார்வையுடன் எதிரில்நின்ற சாளியின் சமீபத்தில்போய், தன்னுடைய இரண்டு கன்னங்களையும் தன்கைகளால் கிள்ளிக்கொண்டான். இதைப் படிப்பவர்களுக்கு சுப்பன் செய்தது ஆச்சரியமாகத் தோன்றலாம். ஆனால், ஸ்வேதர்களுக்குள் (வெள்ளைக்காரருக்குள்) 'சலாம்' செய்வதும் தொப்பியைக் கையில் தூக்கிக்கொள்வதும், நமக்குள் கைகூப்புவதும் தெண்டனிடுவதும், எப்படியோ அப்படி அந்தக்காட்டுமனிதருக்குள், கன்னத்தைக்கிள்ளிக் கொள்ளுதல் தாழ்ந்த வணக்கத்தைக் குறிக்கும் உபசார முறைமை. சாளியினுடைய மிருதுவான மான் போன்ற பார்வையைக் காணவே சுப்பனுக்கு 'நாம் எப்படியாவது உயிர் தப்பலாம்' என்ற தைரியம் உண்டாயிற்று. சுப்பன் கறுப்பாயிருந்தாலும், கம்பீரமான காத்திரத்தை யுடையவன். அவனுடைய சிரித்த முகத்தையும், சாந்தம், புத்திக் கூர்மை, இரக்கம், பெருந்தன்மை, முதலிய குணங்களை எழுதிவைத்ததுபோல் காட்டுகின்ற, மை தடவியது போல் கரிய, பெருவிழிகளையுடைய, கண்களையும் பார்ப்பவர்கள் அவனுக்கு வசியமாவது நிச்சயம். உயிராசை பணவாசை நிறைந்து, 'திடீரென்றுமரணம் சம்பவித்து விட்டதே' என்று நடுங்கி அழுது கொண்டிருந்த நாராயணனுக்குங்கூட சுப்பன் வாய் திறந்து பேசினவுடன் அவனிடத்தில் நம்பிக்கை உண்டாகவில்லையா? சுப்பன் சாளியிடம் சென்று வணக்கம் செய்யவே, சாளி அவனுடையகருத்தை அறிந்தவளாயிருந்தாலும், அவன் பேசிக் கேட்கவேண்டுமென்றோ, அல்லது அவனை சமீபத்தில் நிறுத்திக் கொண்டே இருக்க வேண்டுமென்றோ, அவனைப் பார்த்து, கொரேமாய்ச் சொல்வதுபோல பாவனை பண்ணிக்கொண்டு, 'என்னகாரியம்? ஏன்?' என்று அதட்டிக் கேட்டாள். சுப்பன், 'பல்லிளித்துக் கெஞ்சுவது என் சுபாவமில்லை. நான் கேட்பதைக்கொடுத்தால் கொடு, இல்லாவிடில் போ' என்று சொல்பவன்போல் கம்பீரமான பார்வையுடன் சாளியின் பாஷையாகிய சீர்திருத்த மற்ற காட்டுத் தமிழிலேயே 'இந்தமனிதர் உங்கள் கையில் அகப்படக் காரணம் நான். அவரை தயவுசெய்து விட்டுவிட்டால், என்னை ரட்சித்ததுபோலும். என்னை இந்தக்ஷணமே கொன்று தின்று திருப்தியடையுங்கள்' என்று சொல்ல அதற்குள் நாராயணனும் வயிற்றைக் குழைத்துக்கொண்டு, பல்லைத்திறந்துகொண்டு 'நான் ரூபாய் வேண்டுமானால் தருகிறேன்' (அதுகூட 'வேண்டுமானால்' தான்) என்று தன்னுடைய சில்லரைப் பையை 'கல கல' என்றுஓசைப்படுத்திக்கொண்டு அதிலிரு

ந்தவெள்ளி நாணயங்களில் ஒருகை வாரிக்காட்டி னன். சுப்பனே போதுமான வக்கீலாயிருந்தாலும், நாராயணனுடைய பை மற்றோர் வக்கீலாக ஏற்படவே, சாளி அவர்கள் பக்கம் விண்ணப்பத்தை அனுகூலம் செய்வதாய்த் தீர்மானம் செய்துகொண்டு, நாராயணன் கையிலிருந்த பணத்தை வாங்கினள். நாராயணன் 'எத்தனை ரூபாய் கொடுக்கிறாய், என்று சாளி கேட்பாள்' என்றுஎதிர்பார்த்தான். சாளி கனவில்கூட பணத்தைக் கண்டவளில்லை என்ற சங்கதி அவனறியான். சாளி பணத்தைக் கையில் வாங்கினவுடன் அதை ஒன்றொன்றாய் தொட்டுப்பார்த்தாள். பிறகு மூக்கினிடம் கொண்டுபோய் மோந்து பார்த்தாள். கண்ணிடம் கொண்டுபோய் உற்றுப்பார்த்தாள். அதில் அனேக நூதன நாணயங்கள் இருந்தன. அவைபார்க்கப் பார்க்கப் பகட்டாயிருந்தன. சாளி ஒன்றுந் தோன்றாமல் அதைக் கையில் வைத்துக்கொண்டு குதித்தாள், குலுக்கினள், 'கல கல' என்று ஓசைப்படுத்தினள், சிரித்தாள், கீழே எறிந்துபார்த்தாள். அதன் நாதத்தைக் கண்டு 'இடி இடி' என்று சிரித்தாள். அங்குமிங்குமோடி ஒன்றொன்றாய்ப் பொறுக்கினள், மறுபடி குலுக்கினள்,சுப்பனைப் பார்த்து சிரித்தாள். சுப்பனிடம் கொடுத்து ஓசைப்படுத்தச் சொன்னள். சுப்பன் அரைஅரை ரூபாயாக எடுத்து தன் விரல்களில் வைத்து 'கணீர், கணீர்' என்று சுண்டினன், அவள் காதினிடம் வைத்துக் குலுக்கினன். அவள் மார்பில் வரிசையாக வைத்து அவளை நிமிர்ந்து பார்த்தான். சுப்பன்சமீபத்தில் வர வர சாளிக்கு சந்தோஷம் அதிகரித்தது. சுப்பனுக்கும் சாளியிடத்தில் ஏதோ ஒருவிதமான நேசம் உண்டாய்விட்டது. இவர்களுடைய சந்தோஷத்தைப் பார்த்துக் கொண்டிருந்த நாராயணனுக்கு பணத்தை அறியாத பாமரரும் உலகத்தில் உண்டா என்று ஆச்சரியமாயிருந்தது, அவனும் தன்னிலைமையை மறந்து சிரிக்கத்தொடங்கினன். சாளி தன் மார்பின் மத்தியில், ஒரு புதிய அரைரூபாயை வைத்துக்கொண்டு, சுப்பனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, ஆடத்தொடங்கினள். சுப்பனும் அவளுக்கு சரியாகக் கைகோர்த்து, நர்த்தனஞ் செய்ய ஆரம்பித்தான். அவர்களுடைய பாட்டுகளும் மெட்டுகளும் காலோசையும் கையோசையும் நாராயணனுக்கு நீலகிரிமலையில் வெள்ளைக்காரராடும் சதிரைக் காட்டிலும் அதிக ஆனந்தமாயிருந்தது. சாளி சந்தோஷப் பெருக்கத்தால் தன் கழுத்திலிருந்து ஒரு சங்குமாலையை எடுத்து சுப்பன் கழுத்தில் போட்டாள். சுப்பன் தோலுடை உடைவாள் சங்குமாலை இவற்றோடும், சாளி கைகால் தோள் தலை கழுத்து முதலிய இடங்களிலும் நிரம்ப பலவர்ணமான சங்குமாலை, வெள்ளைக்கல் மாலை முதலிய மாலைகளையும், தலையில் மயிலிறகும், மார்பு, மேற்கை முதலிய இடங்களில் ஓர்வித பச்சை எண்ணெயையும் தடவிக்கொண்டு நிர்வாணமாய்,

> தந்தனக்கதந்தனக்க தாலேதாலாலோ
> தனதனதந்தனக்க தாலேதாலாலோ.

என்று பாடிக்கொண்டும் ஆடிய ஆட்டம் சென்ற வருஷத்தில் கவர்னர் முதலிய மகாப்பிரபுக்கள்கூடி ஆடிய பிசாசாட்டத்திலும் அதிக அழகாயும் விசித்திரமாயுமிருந்தது. இப்படி சற்று முன்னம் அழுகையும் அச்சமும் நிரம்பியிருந்த அறையில் இப்பொழுது சந்தோஷமும் சதிருமாயிருந்தது. இவ்வளவு உல்லாசமாயிருக்கும் தருணத்தில் திடீரென்று கதவு திறக்கப்பட்டது. எல்லாரும் திரும்பிப் பார்க்க, நாராயணனையும் சுப்பனையும் பிடித்துவந்த காட்டுமனிதன் சாளி சாளியென்று கூவிக்கொண்டு வந்தான். அவனைக்கண்டவுடன் நாராயணன் பூனையைக் கண்ட எலிபோல் பதுங்கிவிட்டான். சுப்பனும் மெள்ள சாளி கையைவிட்டு நழுவினன். உடனே சாளி தன்தகப்பன் உள்ளே வருமுன்னே சுப்பன் எதிர்கொண்டு சிரித்த முகத்துடன் 'என் அப்பா' என்று கேட்க அவன் விசாரப்பட்டவன் போல் மௌனமாய் இருந்தான். சாளி 'ஏன் விசனமாயிருக்கிறீர்கள்' என்று கேட்க, அவன் 'ராத்திரி கூத்துக்கு பச்சை எண்ணெய் வேண்டாமா, அது தான் கிடைக்கவில்லை. எவ்விதம் கூத்துக்குப் போவது' என்றான். சாளி 'ஏன் மாடனிடத்தில் எண்ணெய் இல்லையோ' என, ஓரி 'இருக்கிறது; ஆனால் அவனுக்கு சங்குமாலை வேண்டுமாம். நம்மிடம் இருக்கிற சங்கு நமக்கே போதாது. என்னிடம் மயிலிறகு இருக்கிறது தருகிறேன்' என்று சொன்னேன், அவன் அது தன்னிடத்திலிருக்கிறது. என்றான் பிறகு நானும், அவனும் காளையிடம் சென்றோம். அவன் சங்குவைத்துக்கொண்டு கோணல் கொண்டை தேடுகிறான். நீலனிடத்தில் கோணல் கொண்டை இருக்கிறது; அவனுக்கு மயிலிறகாவது எண்ணெயாவது வேண்டாமாம். போயலைந்தது வீண். ஒருவியாபாரமும் நடக்கவில்லை. என்ன செய்வது' என்றான். அதற்கு சாளி 'எண்ணெய் இல்லாமல் என்னகூத்து' என்று சோர்ந்துசொல்லி, பிறகு திடீரென்று நினைத்துக்கொண்டவள் போல் எண்ணெயும் சம்பாதிக்க ஒருவழியிருக்கிறது' என, ஓரி ஆவலுடன் 'அதென்ன?' வென்று கேட்க, தன்கையில் இருந்த நாணயங்களை அவனுக்குக் காட்டினள். அதைக்கண்டவுடன் ஓரி அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையில்லை. அவன் குபீரென்று ஓரேழும் பாய் எழும்பிக் கள்குடித்தவன்போல் குதித்து தன் கருத்த மீசையை முறுக்கிக்கொண்டு 'சபாஷ்' என்று தன் இரண்டு தொடைகளையும் தட்டிக்கொண்டு 'எண்ணெய் வாங்கி விட்டேன், எண்ணெய் வாங்கிவிட்டேன், கூத்து உண்டு; ராத்திரி கூத்துக்

குப் போவோம்' என்று கூச்சலிட, இதுதான் சமயம் என்று சாளி 'அப்பா அந்த வஸ்து(அதற்குப் பெயர் தெரியவில்லை) நம்முடைய தல்லவே அதோ அந்த மனிதனுடையது' என்றாள். அதற்கவன் 'என்றால் என்ன, அவனைத்தான் ராத்திரிக் கொல்லப் போகிறேனே. அவனுடைய பொருள் எல்லாம் நமது தானே' என்றான். அதைக்கேட்டுக் கொண்டிருந்த நாராயணமுதலியார் ஐயையோ மோசம் போனேனே' என்று அழ ஆரம்பித்தார். சாளி ஓரி யைப் பார்த்து 'அவனைக்கொன்று விட்டால் யார் நமக்கு.வேண்டும்போதெல்லாம் அந்த வஸ்துவை கொடுப்பார்கள்' என, ஓரி 'ஓ ஹோ, அப்படி நினைத்த போதெல்லாம் அதை சம்பாதிக்க அவனுக்குத்தெரியுமோ? அப்படியானால் அவன் இருக்கட்டும். இன்னொருவனைத் தின்போம்' என்ன, நாராயணன் தான் தப்பினதாக நிச்சயம் செய்துகொண்டு சுப்பனுக்காக கவலைப்பட்டான். அதற்குள் சாளி 'இரண்டுபேருக்கும் அதுதெரியும்' என, ஓரி 'அப்படி யானால் இருவரும் இருக்கட்டும். அவர் நமக்கு தேவையானகாலத்தில் தேவையானபடி கொடுக்கவேண்டும்' என்றான். சாளி 'இன்று அவர்களை விட்டுவிட்டால் நாளை மறந்து அவர்களைக்கொன்று விட்டால் என்ன செய்வது' என, ஓரி எழுந்து தன் கத்தியை கீழே போட்டுக்கொண்டு 'அவர்களைக் கொல்வ தில்லை' என்று இரண்டுமுறை அதைத்தாண்டி பிறகு அதை கையாலெடுத்துக் கண்ணில் ஒத்திக்கொண்டான். இவ்விதம் அவன் சத்தியம் செய்துகொடுக்கவே, நாராயணன் 'தப்பித்தோம் தப்பித்தோம்' என்று சுப்பனை தட்டிக்கொடுத்தான். சுப்பன் 'கடவுள் நம்மைக் கைவிடமாட்டார்'' என்றான்.

இதற்குள் ஓரி ஒரு அரைக்கால் ரூபாயைக் கையில் எடுத்துக்கொண்டு ஓட்டமாய்ஓடி மாடனிடத்து அதைக்காட்ட மாடன் இது என்ன இவ்வளவு நன்றாயிருக்கிறதே. அதை எனக்குக் கொடுக்கமாட்டாயா? என, 'அதற்காகத் தான் கொண்டுவந்தேன்' என்றுசொல்லி அவன் கையில் கொடுத்தான். உடனே மாடன் உள்ளே ஓடிப்போய் தன்னிடத்திலிருந்து எண்ணெயை யெல்லாம் ஓரிக்குக் கொடுத்து, 'இது ஏது?' என்று கேட்டான். ஓரி சங்கதி எல்லாம் சொல்லி 'அந்தமனிதர்களை நான் கூத்துக்குக் கூட்டிவருகிறேன்' என்றான். மாடன் 'அவர்களென்ன நம்மைப்போல மனிதர்களா' என்ன, ஓரி 'நான் இப்பொழுதுஒன்றும் சொல்லமாட்டேன். ராத்திரி நீயே பார்' என்று சொல்லி விரைவாய் வந்து விட்டான்.

இதுநிற்க, மாடன் காளையிடத்தும், காளை நீலனிடத்தும் அந்த அரைக்கால் ரூபாயைக்கொடுத்துத்தங்களுக்கு வேண்டியவைகளை வாங்கிக்கொண்டார்கள். அன்று ராத்திரிக் கூத்துக்கு கோணல்கொண்டை முதலிய சாமான்கள் அவசியமாய் வேண்டியிரா்விட்டால், மாடனாவது காளையாவது அந்தரூபாயை விட்டுப்பிரிந்திருக்கமாட்டான். நீலன் அதை வாங்கினது தான் தாமதம், அதை பத்திரமாய் ஒரு தோலில் முடிந்து வேறெங்கேயாவது இருந்தால் எலி பெருச்சாளி தின்றுவிடும் என்று பத்திரமாய்க் கழுத்தில் மாட்டிக் கொண்டான்.

பணத்தையே கண்டறியாத ஒரு ஜாதியார் இருக்கிறார்கள் என்பதைப்பார்க்க நாராயணனுக்கு நிரம்ப ஆச்சரியமாயிருந்தது. பிறந்தது முதல் பணத்துடன் பழகிவரும் நமக்கு அது அதிக சாதாரணமாயிருக்கிறது. ஆதலால் அது இல்லாவிட்டால் உண்டாகும் தீங்குகளையும் அது இருப்பதால் உள்ள நன்மையையும் நாம் யோசித்துப்பார்க்கிறதில்லை. பாருங்கள்: எல்லாப்பொருள்களும் இருந்தும் பணம் என்ற ஒருவஸ்து இல்லாததால் ஒருவருக்கும் வியாபாரம் நடக்கவில்லை. சங்கு வேண்டியவனுக்கு மயிலிறகு தேவையில்லை. மயிலிறகு வேண்டுவோனுக்கு எண்ணெய் தேவையில்லை. இவ்வாறு இருந்தால் வியாபாரம் நடப்பது எவ்வளவு கடினம்! ஓரிக்கு எது தேவையோ அது மாடனிடத்திலும்,மாடனுக்கு எது தேவையோ அது ஓரியிடத்திலும் இருந்து விட்டால் வியாபாரம் நடந்து விடும். தினந்தோறும் இந்தமாதிரியே ஏற்படுமோ?

இது நிற்க. ஓரி எண்ணெய் வாங்கி வந்தவுடனே தானும் பூசிக்கொண்டு, சுப்பன், நாராயணன், சாளி இவர்களையும் பூசிக்கொள்ளச் சொன்னான். அப்பொழுது சுப்பன் சாளியைப் பார்த்து 'எண்ணெய் அதிக துர்க்கந்தமாயிருக்கிறது', என, நாராயணன் தனக்குள் 'சுப்பன் காட்டுமனிதன் போலவு மிருக்கிறான், அல்லபோலும் தோன்றுகிறான்; அவன் விருத்தாந்தத்தை அறியவேண்டும்' என்று சொல்லிக்கொண்டு தன் இடுப்பில் சொருகியிருந்த ஒருசந்தனவில்லையை எடுத்து சாளிக்குக்காட்ட, சாளி வாங்கிப்பார்த்து 'இது அதிக வாசனையா யிருக்கிறது, இதென்ன?' வென்று வாங்க,சுப்பன் அதைக்கொஞ்சம் அரைத்து சாளிகையில் தடவ, சாளி 'நன்றாயிருக்கிறது; எண்ணெய்வேண்டாம். இது தான் பூசிக்கொள்ளவேண்டும்' என்று சந்தோஷத்துடன் கூச்சலிட்டாள்.

(இன்னும்வரும்.)

ஆர். செல்வப்பிள்ளை.

---

## ஸ்ரீமத் திராவிட ஆயுள்வேதம்.

(திராவிட ஆயுள்வேத வைத்தியர் ஒருவர்எழுதியது.)

(தொடர்ச்சி)

முற்பாகத்து முதலில் ஸ்ரீமத் திராவிட ஆயுள்வேதம் இன்னதென்றும், அதன் ஆசிரியர்களையும் கூறி,

முடிவில் போலி மருத்துவக்கலைகளின் உற்பத்தியை யும் எழுதிமுடித்தேன். போலிமருத்துவக் கலைக ளில் உண்மை சிறிதும், பொய்மை பெரிதும், இருத் தலால், அவைகளை ஆதாரமாக்கொண்டு விதித்த வைகளை நம்பிக்கையுடன் செய்தல் கூடாது என் பது, எம் உண்மை மருத்துவக்கலைகளின் கல்வி கே ள்விகளிற் சிறந்த ஆன்றோர் பலர் உடன்பாடு. இவைகளை ஒழித்து, உண்மை மருத்துவக்கலைகளைப் பார்த்து, அவைகள் கூறியவைகளைச் செய்து வரு வதே இன்றியமையாக் கருமம். உண்மை மருத்து வக்கலைகள் ஏட்டுப்பிரதிகளிலும் அச்சுப்பிரதிகளிலும் தற்காலத்தில், எம்மவர் அநேகர்பால் இருக்கின்றன. அவைகளை யோதுவோர் இலக்கிய இலக்கணப்பயி ற்சி மிக உடையராய் இருத்தல் வேண்டும். மருத் துவக்கலைகள் எல்லாம் இலக்கிய இலக்கணக்கடல் குடித்துத் தெய்வீகம் பொருந்திய ஆன்றோர் பல ரால், ஏறக்குறைய செய்யுள் நடையிற் செய்யப்பட் டிருக்கின்றன வாகையால், கல்வியற்றவர்களுக்கு எளிதிற் புலப்படல் அரிது. இலக்கிய இலக்கணங்க ளிற் சிறிது பயிற்சியுள்ளவர்கள், தங்கள் வித்தியா கர்வத்தினால், நுண்ணறிவும், அனுபவமுமுள்ள மரு த்துவக்கலைஞர் பால் அணுகாது, மருத்துவக்கலைக ளைக்கொண்டு, தாங்களே அவைகள் கூறுவண்ணஞ் செய்யத்தலைப்படுகிறார்கள். இங்ஙனஞ் செய்யத்த லைப்படுபவர்கள், அநுபவமற்றவர்கள் ஆதலால் அவர் கள் பாற் சார்தல் கூடாது. மருத்துவர்கள், தேவ தா உபாசனை, பலசாத்திரங்களைக் குருமுகமாய் ஆ ராய்ந்தறிந்திருத்தல், திரிகரண சுத்தி, பலவியாதிக ளைத் தீர்க்குதல், நாளும் வியாதிகளைக்கண்டு அஞ்சா ததீரத்துவம், மிகுபுத்திநுட்பம், பெரியோர்சிநேகம், ஆசாரம், மேம்பாடு, நற்குணம், அன்பு இத்தன்மை கள் உற்றவராய், தேகம், தேசம், காலம், ரோகம், ஔஷதம், பதார்த்தகுணம், சரீராதாரம், உதராக் கினி, தேகபலம், ஆகாரம், கைபாகம், செய்பாகம், இன்ன நோய்க்கித்தனை நாள் ஔஷதங் கொடுக்க வேண்டும் என்னுங் காலஅளவு, ஆகிய முப்பேதங் களை யோர்ந்தவராய் இருத்தல்வேண்டும். என்னை:

"தெய்வவுபாசனை பலநூலெல்லை காண்டல்
திரிகரண சுத்திபன்னோய் தீர்த்தனாளும்
நைவகன்ற தீரமதி நுட்பஞ் சான்றோர்
நட்பொழுக்க மேன்மை குணமன்புள்ளானாய்
மெய்வசுதை விகலையணங் குறைபதார்த்த
விதியுடற் காதார மடலங்கிமாந்தற்
கைவரு மெண் பேதமெலா முணர்ந்தற்றான்"

என்றார் பேராசிரியர். மருத்துவர்க்குற்ற இவ்விதச் சிறப்புகளில் பல பிணிகளை யஞ்சாதுகண்டு தீர்ப்பது மட்டும் அனுபவத்தால் வரவேண்டும். ஏனெனில், மானிடருக்குப்பழவினையாலும், உணவு தொழில்க ளது ஒவ்வாமையாலும் வாத முதலிய முப்பகுதிப் பிணிகள் வரும். அவைகளை இன்னதென்று கண்ட றிதல்அனுபவ மிருந்தாலொழிய அமையாது. அனு பவங்கடக்கவே, இக்காலத்திலும் ஆங்கிலேய மருத் துவர்கள், மருத்துவங்கற்கு மாணக்கர்களைப்பிணியா ளர் பாலிருத்தி வியாதிகளின் கூறுபாடுகளை வருஷ க்கணக்காக் கற்றுக்கொடுக்கிறார்கள். இம்முறைக்கு ஆங்கிலேயர்கள் க்ளினிகல் இன்ஸ்ட்ரக்ஷன். (Clinical instruction) என்று கூறுவர். இது மட்டும் மருத்துவர்களின்இலக்ஷணங்களையும், அவர்களுக்கு அனுபவங்கள் வேண்டுமென்பதையும் தொகுத்துக் கூறினேன். இனிச் சரீரமும், அதன்பெருமைகளும், அதைப்பீடிக்கும் பிணிகள் வரும் காரணங்களும், அவைகளைத் தீர்க்கும் வழிகளும் இத்திறத்தன வெ ன்று சங்கிரகித்துக் கூறத்தொடங்குகின்றேன்.

### சரீரம்.

இம்மை மறுமை வீடு பேறுகளை யடைதற்குரியது இம்மனுஷ சரீர மாதலால், அதற்குள்ள ஆதார பே தங்களை யுய்த்துணர வேண்டும். சரீரத்தினது ஆதா ரபேதங்களாவன: வாதம், பித்தம், சிலேஷ்மம், ரச தாது, அஸ்திதாது, மச்சைதாது, சுக்கிலதாது, மலம், மூத்திரம் எனுமிப்பனிரண்டு. இவைகளின் விரிவு களை "சரீரம்" என்னுஞ் சாத்திரத்திற் கண்டு தெளிக.

### பிணிகள்.

சரீரத்தைப் பீடிக்க வரும் பிணிகளில், பழவினை யால் வருபவைகள் வினைகழிந்தாலன்றி தீராதாகை யால் அவைகளை யொழித்து, மற்றவைகட்கு மரு த்துவஞ் செய்யப்படும் பிணிகள் அபக்குவஉணவுண் பதினாலும், மிகப்புசித்தலினாலும், தொழில்கள்வேறு பாடாதிகளினாலும்வரும்.

### அபக்குவ வுணவுண்டல்.

அபக்குவ உணவுகள் எண்வகைப்பட்டு ஒவ்வொ ன்றும் பலபிணிகளை வருவிக்கும். அவையாவன: 1 அஸ்ருத்தோஷம் (கஞ்சி சிக்கிக் கொள்வது) தூபம் விதூமம் எனும் அசிரணங்களைப் பிறப்பிக் கும். 2. பிச்சில் தோஷம் (குழைந்து போவது) சட ராக்கினியை அணைக்கும். 3. அசுசிதோஷம் (கிருமி உமி முதலியவைகளுடன் சமைப்பது) அரோசகத் தையுண்டாக்கும். 4. கொதித்தோஷம் (நருக்கரிசி யன்னம்) அலசரோகத்தை யுண்டாக்கும். 5. சுஷ்கி ததோஷம் (ஆறியுலர்ந்து போதல்) விதூம ரோகத் தை யதிகரிக்கும். 6. தக்ததோஷம் (காந்தின அன் னம்) ஜீரணதாதுரோகம் விளைவிக்கும். 7. விருப தோஷம் (கொழியல் அரிசியன்னம்) ஆயுள்முதலிய வைகளைக்கெடுக்கும். 8, அனர்த்துஜதோஷம்(நொந் து ஜலம்பிறந்து நூலிழைந்த அன்னம்) அதிநித்திரா தோதிரோகங்களைசனிப்பிக்கும்: ஆதலா லிவைகளை யுண்ணல் அடாது. உணவுகளைச்சித்தபாகம், வீமபா

கம் நளபாகம், தேவபாகம், எனும்பாக சாத்திரங்களிற் கூறிய வண்ணஞ் செய்தருந்தல் அவசியம்.

### சீரணமறிந்து புசித்தல்.

ஒருவன் சீரணத்தைக் குறிகளினாலே (உடம்பு சிறுகியிருத்தல், நோக்கம் பரிசுத்தமாயிருத்தல், கரசரணாதி காரணங்கள் தொழிற்குறியவாதல், பசிமிகுதல்) அறிந்து உண்பானாயின் அவன் பாற் பிணிகள் அணுகாது. அங்ஙனுண்டாலும், முன்னுண்டது சீரணித்து, மிகப்புசித்து, உண்ணும் போது உண்பவன் உணவு, வாதபித்த சரீரசுபாவங்களுக்கு மாறுகொள்ளாத், பெரும்பொழுது, சிறுபொழுது, என்கிறகால வேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற்காகாது தேனு நெய்யும் தம்முள் ஒத்து சுவை வீரியங்களால் மாறுபட்டு நஞ்சாதல் போல்வன நீக்கி நீரைக் காய்ச்சிப், மோரைப்பெருக்கி நெய்யுருக்கிப் புசித்தல் சிலாக்கியம். இல்லாவிடில் பற்பல துன்பங்கள் உண்டாகும்.

**தொழில்களது வேறுபாடு.**—மலசலத்தை யடக்கல், விந்துவை யதிகமாய் விடல், எண்ணெயிட்டுக் குளிர்நீரிற் குளித்தல், பகலிற் சையோகமும், நித்திரையுஞ் செய்தல், தன் வயதிற்கு மேற்பட்ட ஸ்திரீயைப் புணர்தல், இளவெயிற் காய்தல், வலதுகை கீழாகப்படுத்தல். முந்நாளிற் சமைத்தகறி யுண்ணல், பசியாதுழி புசித்தல், காலைமாலைகளிற் சிலம்பம்முதலிய தொழில்களைச் சரீர சுபாவங்களுக்கேற்ற வண்ணஞ் செய்யாதிருத்தல் ஆகிய இவைகள் பிணி வருதற்காரணங்கள் ஆகின்றன. இவைகட்குப் பிரமாணங்கள்:

"திண்ண மிரண்டுன்னே சிக்க வடக்காமல்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காமல்-உண்
[ணுங்கால்
நீர்சுருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்
பேருரைக்கிற் போமேபிணி." [தாம்

* * * *

"எண்ணெய் பெறின் வெந்நீரிற் குளிப்போம்"
பகற்புணரோம்பகற்றுயிலோம்பயோதரமுமூத்த
வேலஞ்சேர் குழலியரோ டிளவெயிலும் விரும்
போம்.
* * "இடதுகையிற் படுப்போம்" [தோம்"
* * "முதனாளிற் சமைத்தகறியமுதெனினு மருந்
'ஞால்ந்தான்வந்திடினும் பசித்தொழியவுண்ணோம்,
நமனார்க்கிங்கேது கவைநாமிருக்கு மிடத்தே"
"சிலம்பு முதன் மல்லயுத்தந் தேசிநடை கொள்
பலம்பரவு மெய்யிருகும்" [ளல்
என்றார் பேராசிரியர்.

அழுக்கு வஸ்திரங்கள் தறியாது, அதிகாலையிற் குளித்துமுண்டாச, அங்கி அரைக்கச்சு முதலிய கட்டிப்போதல் வேண்டும். இவைகளினால் அநேகரோகங்கள் நிவர்த்தியாகும்.

### பிரமாணங்கள்.

அழுக்குவஸ்திரந் தரிப்பதிலுண்டாகுந்துன்பங்கள்:-
[ளிக்கும்
"நோயடருங் காந்திகெடும் நுண்ணறிவும் போயொ
தீயகுளிர் துக்கந் தினவுசங்கை—வாய்பேசக்
கூசுதலு முண்டாகுங் கோதாரு மாசுடைச்சே.
பேசுதலு மியாதிதற்குப் பின்பு.,,

அதிகாலைக்குளித்தலின் நன்மை:—

"காலைக் குளிக்கக்கடும்பசியுண்டா நோய்போம்"

முண்டாசு, கவசம், நடுக்கட்டுகளின் குணம்:—

முண்டாசு வாதபித்த முன் மொழிக்கு மெய்க்கவச
முண்டாயின்காந்திபுட்டி யுண்டாகும்—திண்டாடு
பித்தமறுந் தீயாம் பிளைத்தநடுக் கட்டுக்குக்
கொற்றமறு வீரியமாங் கூறு"

என்று பலவாறாகக் கூறப்பட்டிருக்கின்றன.

இதுகாறும் கூறியவண்ணஞ் செய்யத்தடையுண்டால், பல பிணிகள் வந்து துன்பங்கள் எண்ணிறந்தன செய்யும். பிணிகளை நாடி, கண்கள், தொனி, உடல், நிறம், நாக்கு, மலம், மூத்திரம் என்னும் அட்டவிதப்பரீக்ஷைகள்செய்து, வாதபித்தசிலேஷ்மங்களாகிய முப்பகுதிகளில், இன்ன காரணத்தால் பிறந்ததென்று நிச்சயிக்க வேண்டும். அட்டவிதப்பரீக்ஷைகளை விரித்து ஒருவாறு பின்னர்க்கூறும் எண்ணமிருப்பதால் இங்கு இவ்வளவிலே நிறுத்தினேன். சா[illegible]திரங்கள் (ஸ்ரீமத் திராவிட ஆயுள்வேதம்) பி[illegible]திக[illegible]த் 4448 என்றுவரையறுத்திருக்கின்றன வெ[illegible]ணிகளை[illegible]னர் கூறினேன். அதிகாயிரம் பிணிகள்இரு[illegible]றுமுன் நம்மவர்கள், தற்காலத்தில் ஔஷதங்கள் கொர்தாலும் அனுபவ முற்ற பிணிகளை இன்னதென்று பின்னி[illegible]து கூறப்படும். பிணிகளாவன: சுரம், அதிசாரம், கிரகணி, அரசம் (மூலம்), அசீரணம், அக்கினி மந்தம், விஷூசிகம், கிருமி, பாண்டு, ரக்தபித்தம், காசம், விக்கல், சுவாசம், சுவரபேதம், சர்த்தி (வாந்தி), மூர்ச்சை, தாகம், உன்மதம், அபஸ்மாரம் (இதில் ஐவகை வலிகளும் அடங்கும்,) நரம்பு வியாதிகள், குஷ்டம், சூலை, கீல்பிடிப்பு, குன்மம், மூத்திரக்கிரிச்சரம, மூத்திரகாதம், அஸ்மா, பிரமேகம், மேதம் (அதிதூல ரோகம்), உதரவியாதி, அடிவயிறுவீக்கங்கொள்ளல்) சோபை, சிலிபதம் (யானைக்கால்), கண்டமாலை, காலகண்டம், பகந்தரம், உபதண்ஷம், (ஆண்குறி வியாதிகள்), சீததத்தம், ஆம்லிபித்தம், (விஷர்ப்பம், (அக்கி இராசப்பிளவை முதலியன), விஷப்போடகம் (சொறி சிரங்கு), மசூரிகம், முகரோகங்கள் (வாய், உதடு, கண், காது, பல்வியாதிகள்) இவைகளும் இவைகளுள்வாதபித்த சிலேஷ்மங்களால்தொந்திக்கப்பட்ட பலபிணிகளும் மாந்தம் முலிதய பால ரோகங்களும்

ஆம். இவைகளின் இலக்கணங்கள் ஜீவரக்ஷாமிர்தம் என்னு நூலிற்தெள்ளத்தெளியக் காட்டப்பட்டிருக்கின்றன. இவைகளை இங்கு விரிக்கிற் பெருகுமாதலால்இவ்வளவுடன் விடப்பட்டது. இவைகளை இன்னதென்று சங்கிரகித்துக் காலமும் இப்பத்திரிகையில் இடமும் இருப்பில் பின்னர்க் கூறப்படும்.

(இன்னும் வரும்)

கே. ஸி. துரைசாமி.

---

## * ஆபத்துக்கிடமான அபவாதம்
### அல்லது
## கமலாம்பாள் சரித்திரம்.

முத்துஸ்வாமி அய்யர் கதவைத்திறந்தவுடன் ராமண்ணு வாத்தியார் உள்ளேவந்தார். அவரைப்பார்த்தால் 45 அல்லது 50-வயதுக்குமேல் மதிக்கமாட்டார்கள். ஆனல் அவருக்கு சதாபிஷேகமாய் வருஷம் 5-ஆய்விட்டது. (அதாவது இப்பொழுது வயது 90.) இன்னமும் சிறுகுளத்தில் இவரை விட்டு வேறொருவரை பிராமணார்த்தத்திற்கு சொல்வதில்லை. அந்த ஊரில் ஒருமாதத்திற்குக் குறைந்தது இருபது சிராத்தத்துக்கு மோசமில்லை. அதில் பதினெட்டுக்குக் குறையாமல் வாத்தியாருக்குக் கிடைக்கும். கலத்தில்பரிமாறும்பொழுது 'போதும்' என்று சொல்லுகிற ஆர்வழக்கம் அவரிடத்துக் கிடையாது. 'எவ்வளவு போட்டாலும் சாப்பிடவேண்டியது. நம்முடைய கடமை' என்று அவர் சொல்லுவார். அந்த ஊர் ஜனங்களுக்கும் அவர் பிராமணார்த்தம் சாப்பிட்டால்தான் திருப்தி. இந்தப் பிராமணர் இவ்வளவு சாப்பிடுகிறாரோ இதில் பாதியாவது நம்முடைய பிதுர்க்களுக்குக் கிடைக்காதா என்று அவர்களுக்கு எண்ணம். எதார்த்தத்தை அவர்கள் அறிந்ததில்லை. இவர் மத்தியானம் சாப்பிடுவது போதாமல், ராத்திரிப்புட்டினியாகையால் இருபது முப்பது வடையை மட்டுந் தின்றுவிட்டு, சுத்தப்பட்டினி யாகவே யிருந்துவிடுவார். உளுந்து வடைதான் அவருடைய தேகக்கட்டு விட்டுப்போகாமல் அவரைக் காப்பாற்றி வருகிறது. ஒருநாள் சுரம் என்று கீழே படுத்துக்கொள்ளவேண்டுமே, கிடையாது. வயதினால் கொஞ்சம் கூனினவர்போல இருந்தாலும் அவர் நடை கொஞ்சங்கூட தளர்ச்சி யடையவேயில்லை. ஆற்றங்கரையில் தினந்தோறும் அவர்தான் ஓடுகோல் தள்ளுகிறது வழக்கம்.

உபாத்தியாயர் உள்ளே வந்தவுடன் நமது முத்துஸ்வாமிஅய்யர் 'மாமா வாருங்கள், வாருங்கள்; குட்டி பலகை கொண்டுவா. (கல்யாணி பலகை கொண்டுவர) உட்காருங்கள், நானே அங்கே வரலாமென்றிருந்தேன்,' என்று

'அடா, யாரடா, வீரா!' என்று கூவினர்.

உடனேவேலைக்காரனுகிய வீரன் 'சுவாமி' என்று வர, அய்யர்: 'அடா, போய் குழந்தை சுந்தரத்தைக் கூட்டியாவா' என்று சொல்லிவிட்டு, வாத்தியாரைப்பார்த்து 'ஜோசியர் அவர்களைக் கூட்டிக்கொண்டுவரச் சொல்லுகிறேன், ராகுவேளை போய் விட்டதல்லவோ, இன்று என்ன, வெள்ளிக்கிழமையோ!' என

'ஆம் ஆம் ஆம் ராகுவேளைபோய் எந்தக்காலம் ஆய்விட்டதே' என்று வாத்தியார் சொன்னர்.

அய்யர் 'ஆம் ஆம் சனிக்கிழமை ஞாபகமாய்ச் சொன்னேன்' என்று சொல்ல, பையன் சுந்தரமும் ஒரு பந்தை உருட்டிக்கொண்டு 'என் அப்பா, கூப்பிட்டாயாமே!' என்றுகொண்டு வந்தான்.

அய்யர் 'பந்து' எதற்கடா? அடடா! தாத்தாமேல் படப்போகிறது அதைக் கையிலே எடு எடு' என,

பையன் 'புதுப்பந்து அப்பா, பெரியகளச்சியாய் உள்ளே வைத்திருக்கிறேன்.'

'அது இருக்கட்டும். என்னவிளையாட்டுபுத்தி, நீ போய் சங்கரஜோசியரை, அப்பாவும்தாத்தாவும்—'

என்று மேல்சொல்லுவதற்குள், பையன் "எந்தத்தாத்தா?" என்று குறுக்கே கேட்க, அய்யர் 'ஆமடா இந்தத் தாத்தாதா னடா' என, 'ராமண்ணுத் தாத்தாவா' என்று பையன் கேட்க முத்துஸ்வாமி அய்யர் 'ஆமாம்! போய் உங்களைக்கையோடு கூட்டிவரச் சொன்னர்கள். ஏதோ அவசரகாரியமாம் என்றுசொல்லிக் கூட்டிக்கொண்டுவா' என்றார்.

பையன் 'என்னகாரியம்சொல்லு' என்றான். அய்யர் 'சொல்லுகிறேன் போ.'

பையன் 'சொன்னல் தான்'

அய்யர் 'அக்காளுக்குக் கல்யாணம்'

குழந்தை, 'அக்காளுக்கு கல்யாணமாம் உங்களைக் கூட்டிக்கொண்டு வரச்சொன்னர்கள் என்றுசொல்லிக் கூட்டி வருகிறேன்' என்று குதித்தோட,

அய்யர், 'இது ஏதடா இவன்! நீஒன்றும் சொல்லவேண்டாமடா, கையோடு கூட்டிக்கொண்டு ஓடிவாடா அப்பா' என்று சிரித்துக்கொண்டு சொன்னர்.

குழந்தை 'அவர் என்னேடோட முடியுமோ, நான் அவருக்குமுந்தி ஓட்டம்பிடித்து விடுவேனே' என்ன,

அய்யர் 'நீ ஓடவேண்டாம் போய் மெள்ளக் கூட்டிக்கொண்டுவா' என்று சொல்ல, சுந்தரம்குதித்துக் கொண்டு வெளியே ஓடினன்.

சற்று நேரத்திற்கெல்லாம் சிவந்த நிறமுள்ள ஒரு மனிதர்உள்ளே வந்தார். அவர்கழுத்தில் ருத்திராட்சமும், கையில் திருப்பதிக்காப்பும், விரலில் பொன்

---

* சென்ற சஞ்சிகையில் "அநியாய அபவாதம்" என்றுள்ளதை "ஆபத்துக்கிடமான, அபவாதம்" என்று திருத்திக்கொள்ளவும்.

மோதிரமும், அணிந்துகொண்டு, நெற்றியில் விபூதி சந்தனாட்சதை தரித்துக்கொண்டு கையில் ஒரு ஏடுடன்வந்தார். அவர் வந்தவுடன் அய்யர் 'வாருங்கள்' என்று ஆசனம் கொடுக்க, வாத்தியார், 'சங்கரா வா' என்று சொல்லி 'இதோ இந்த ஜாதகங்களைப்பார்' என்று கையில் கொடுத்தார்.

ஜோசியர் உட்கார்ந்துகொண்டு 'குட்டிக்கா, ஒரு கட்டு ஜாதகம் இருக்கிறதே. நூறுக்குக் குறையாது போல் இருக்கிறதே' என,

அய்யர் 'இருக்கும்' என்றார்.

ஜோசியர் 'உங்களுடைய குணத்திற்கும் புத்திக்கும் ஐஸ்வரியத்திற்கும் வாய்திறந்து சொன்னால் போதாதா. இலட்சம் ஜாதகம் வருமே. குழந்தைக் குத்தான் என்ன, எல்லாரும் பெண் அவளும் பெண்ணு! அவள் புத்திக்கும் சாந்தத்துக்கும் அழகுக்கும் படிப்புக்கும்——' என்றிப்படி ஸ்துத்தியம்பண்ண,

அய்யர் சஹிக்கமாட்டாதவராய், 'குட்டிக்கு 11-வயது நிரம்பப்போகிறது. இந்த வருஷத்திலாவது மேலைக்காவது கலியாணத்தை நடத்தி விட வேண்டும்' என்றார்.

ஜோசியர்: 'இதுதான் சரியானவயது இதற்குமுன்; என்ன கலியாணம்! அதெல்லாம் எனக்கே மனதுக்கு சமாதானப்படுகிறதில்லை' என்று சொல்லிக்கொண்டே 'ஆஹா இதுபேஷ் ஜாதகம்: பஞ்சமத்தில் சூரியன். ஜனனம் சனி திசை, சுக்கிர திசையில் நல்லயோக மிருக்கிறது' என,

முத்துஸ்வாமி அய்யர் 'பொருந்தின ஜாதகத்தையெல்லாம் ஒரு பக்கமாக வையுங்கள், அப்புறம் அதிலே பொறுக்கிக்கொள்வோம்' என்றார்.

வாத்தியாரும் 'இதற்கு இரண்டுபாவ மிருக்கிறது. இதுவும் பாவஜாதகந்தான்,' என்று ஒன்றொன்றாய்த் தள்ளிவைத்துக் கொண்டிருந்தார்.

. . . . . .

இங்கே இப்படியிருக்க மதுரையில் வெள்ளியம்பலத்தெருவில் ஒருபெரிய காரை மச்சுவீட்டுத்திண்ணையில் இரண்டு கிழவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுள் ஒருவர், 'முத்துஸ்வாமி பெண் ஜாதகமும் பயல் ஜாதகமும் பொருந்துகிறது. அதுதான் என் மனதுக்குப் பிடித்ததாயிருக்கிறது. நீங்கள் இன்னும் யோசனை செய்துகொண்டு சொல்லுங்கள்' என்றார். மற்றவர் 'யோசனை யென்ன? மனதுக்கும் பிடித்து ஜாதகமும் பொருந்தினால் அதைத்தான் பண்ணிவிடுவோம். முத்துஸ்வாமியும் மனிதர்கள்பேரில் அபிமானம் விதரணை இதெல்லாமுடையவன். அவன் சமுசாரம் அதைவிட. நான் போய்விட்டேனானால் மாமா, மாமா, என்று செய்யும் ஆசார உபசாரம் சொல்லி முடியாது. ஊர் யோக க்ஷேமம் விசாரிக்கிறதும், எதிராளி நோக்கத்தைக் கண்டு நடக்கிறதும் அவளிடத்தில் நிரம்ப 'நன்றாயிருக்கும். இரைந்தசொல் கிடையாது. ஒருவர் பகை கிடையாது.' என,

மற்றவர்: 'போகட்டும். அதுதான் எனக்கு மனதிற்குப் பிடித்ததாய் இருக்கிறது. ராத்திரியும் புஷ்பம் வேணுமானால் வைத்துப்பார்ப்போம்' என்றார்.

அதற்கு கிருஷ்ணய்யர் 'புஷ்பம் வைத்துப் பார்ப்போம் சகுனத்தையும் பார்ப்போம். ஜாதகத்தையும் ஒருதடவைக்கு இரண்டுதடவை பார்ப்போம். மனதில் சந்தேகமென்னத்திற்கு? நமக்கு என்ன, பெண்கிடையாதா? நாம் செய்வதை எல்லாம் செய்துவிட்டால் அப்புறம் உள்ளபடி யிருக்கிறது. இராத்திரி கோயிலுக்கு நானும் வருகிறேன். மீனாட்சி சம்மதத்தையும் கேட்போமே. இதிலென்ன' என்றார். நாராயண அய்யரும் 'ஆஹா, சரி, அப்படியே செய்வோம்' என, கிருஷ்ணய்யர் 'நான் சித்திரை வீதிவரையிலே போய்விட்டு அப்புறம் வருகிறேன்' என நாராயண அய்யர் 'நல்லது' என கிருஷ்ண அய்யர் கீழே இறங்கிச் சென்றார்.

(இன்னும் வரும்)

பி. ஆர். சிவசுப்பிரமணிய அய்யர், பி. ஏ.

---

## குடித்தனம் பண்ணுகிற மூன்று விதங்கள்.

### இரண்டாவது: வரும்படிக்குச் சரியான செலவு செய்கிறது.

இப்படிக்கு தர்மசீலனும் சத்தியவதியும் படிப்படியாய் நல்ல ஸ்திதிக்குவந்து பெரியோர்கள் புகழும்படியான நடுவுநிலைமையிலிருந்து வெகு சுகமாய் வாழ்ந்தார்கள். தினந்தோறும் இரவில் வீட்டுவேலைகளையெல்லாம் முடித்து தன்குழந்தைகளையும் தூங்கச் செய்து, தர்மசீலனும் வரவு செலவு கணக்கு எழுதி முடித்தவுடனே, கணவனும், மனைவியும் உல்லாசமாய்ப் பேசத் தொடங்குவார்கள். சத்தியவதிக்கு எப்பொழுதும் தாங்கள் முன்னிருந்த ஸ்திதியையும் இப்பொழுதிருக்கும் ஸ்திதியையும் பற்றிப் பேசுவதிலேயே வெகு பிரியம். சிலவேளைகளில் தர்மசீலனை ஏதேனும் புத்தகங்களைப் படிக்கச்சொல்லி தானும் அதைக் கேட்டுக்கொண்டே வருவாள். ஆனால் எப்பொழுதும் அவள் கொஞ்சம் படிப்பதற்கு முன்னே சத்தியவதி ஏதாவது தங்கள் குடித்தன விஷயத்தைப்பற்றி பேச ஆரம்பித்து, தர்மசீலனுக்கு புத்தகத்தைப் படிப்பதைப் பார்க்கிலும் இவளோடு பேசுவதில் அதிக ஆனந்தமுண்டாகிறதென்று தோன்றி புத்தகத்தை மூடி வைத்துவிடும்படி செய்வது வழக்கம். இவ்வாறு தங்களுடைய பூர்வஸ்திதியாகிய தரி

த்திரத்தை அடிக்கடி நினைத்துக் கொள்வதினாலே இப்பொழுது தங்களுக்கிருந்த பாக்கியத்தின் மேன்மையானது அவர்களுக்கு நன்றாய் விளங்கிற்று.

மாமா மலையகேது அடிக்கடி இவர்களைப் பார்க்க வருவதுண்டு; ஆனாலிப்பொழுது இவர்கள் வேறு வீட்டுக்கு வந்துவிட்டபடியால் மாமாவுக்கு அவ்வளவு தூரம் நடந்துபோவது பிரயாசமா யிருந்தது. அவருக்கு வயது முதிர்ந்துவிட்டபடியால் தேகம் பலஹீனமானதுமன்றி அடிக்கடி தன் கையினால் மார்பை பிடித்துக்கொள்வதும் வழக்கம். சத்தியவதி "ஏன் அப்படி மார்பைபிடித்துக்கொள்ளுகிறீ" ரென்று கேட்டால், "கொஞ்சம் மார்பில் வலியிருந்தது; இப்பொழுதொன்றுமில்லை" எனச்சொல்லுவார். இவர்கள் வாங்கிக்கொண்ட வீடு தங்களுக்கு வேண்டியதைப்பார்க்கிலும் அதிகப்பெரியதாயிருந்தது. ஆகையால் அவ்வளவு பெரிய வீட்டுக்கு இன்னும் ஒரு வேலைக்காரனும் அதிகமாய் வேண்டியதா யிருந்தது. பெரிய வீட்டுக்கு வந்தவுடனே இவர்களுக்கு மதிப்பும் கொஞ்சமதிகமாயிற்று. அலங்காரவிநோதியும் சத்தியவதியைத் தன் தோழியென்று சொல்லிக்கொண்டு இவள் வீட்டுக்குவரத் தலைப்பட்டாள். மேலும் அருகாமையிலிருந்த பணக்காரர்க ளெல்லோரும் இவ்வீட்டுக்கு வந்திருப்பவர்கள் யாரென்று விசாரிக்கத் தொடங்கினார்கள். இவர்கள் வீட்டுக்கு வந்தவர்களெல்லோரும் சத்தியவதியின் குணத்தைப் பார்த்து மெச்சி அவளுக்கு யாதேனும் ஓர்உபகாரம் செய்யவேண்டுமென்று தீர்மானித்தார்கள். இப்படிக்கு இவ்விருவரும் பணக்காரர்களுடைய சிநேகிதத்தைச் சம்பாதிக்கலாயிற்று. ஆனா லிதுவரையில் பணக்காரர்களுடைய துர்க்குணங்களெல்லா மிவர்களுக்கு வந்துவிடவில்லை. தங்களெதிர்வீட்டுக்காரர்க ளொரு விருந்துசெய்து இவர்களை அழையாம விருந்துவிட்டால் அதற்காக வயிற்றெரிச்சலும், அகங்காரமு மிவர்களுக்குண்டாவதில்லை. சத்தியவதியோ தன் குழந்தைகள் நல்ல ஸ்திதிக்கு வரும்பொருட்டுத் தான் தனக்கு முன்னிருந்த சிநேகிதர்களைக் காட்டிலும் பணக்கார சிநேகிதர்களால் வெகு ஒத்தாசை கிடைக்குமென்று சொல்லிக்கொண்டாள். இருந்தபோதிலும் சத்தியவதிக்கு கர்வமும் பேராசையும் கொஞ்சங்கொஞ்சமா யுண்டாகிக்கொண்டே யிருந்தது. இப்பெரிய வீட்டுக்கு வந்ததும் பணக்காரர்களுடைய சிநேகம் கிடைத்ததும் தர்மசீலனுடைய தொழிலுக்கு மிகவும் அனுகூல மாயிற்றென்பது வாஸ்தவந்தான். தர்மசீலனுடைய அதிர்ஷடவசத்தினால் அவ்வூரிலுள்ள லெட்சாதிகாரியாகிய செல்வகுமாரனென்பவருக்கு தனது குடும்ப வைத்தியர் ஊரிலில்லாத சமயத்தில் சுவரங்கண்டது. உடனே அவர் தர்மசீலனுக்குச் சொல்லியனுப்பி வரவழைத்து அதுமுதல் அவனையே குடும்பவைத்தியனாக நியமித்துவிட்டார். இவ்வாறு தங்களுடைய ஸ்திதி மேன்மேலும் உயர்வடைந்தபோதிலும் தர்மசீலனும் சத்தியவதியும் எப்பொழுதும்போலவே செட்டாகக் குடித்தனஞ் செய்துவந்தார்கள். ஆனால் தங்களுடைய குழந்தைகளின் சௌக்கியத்திற்காகவும், கல்விப் பயிற்சிக்காகவும் மாத்திரம் தாராளமாய்க் கணக்குப் பாராமல் செலவிட்டார்கள். அவ்வூரிலுள்ள வெகு நன்றாய் நடத்தப்பட்ட ஒரு பேர்போன பள்ளிக்கூடத்திற்கு தங்கள் குழந்தைகளை யனுப்பி அவர்களுடைய விஷயத்தில் வெகு சாக்கிரதையாய்க் கவனித்துவந்தார்கள். இப்படியிருக்க இவர்களுக்கு அயல்வீட்டிலிருந்த சுதர்சனனென்பவன் பெண்சாதிக்கும் சத்தியவதிக்கும் வெகு சிநேகமுண்டாயிற்று. மிகவும் டம்பமுள்ள பணக்காரர்களுடைய வீட்டில் நெருங்கிப் பழகும்படியாய் சத்தியவதிக்கு இதுவரையில் சந்தர்ப்பப்படவில்லை. யாதலால் சுதர்சனன் வீட்டில் நடக்கும் மரியாதைகளையும் அங்கு சுதர்சனன் பெண்சாதி முதலானவர்களின் உண் கலங்கள் வெள்ளியால் செய்யப்பட்டிருந்ததையும் அவள் பார்த்தது இதுதான் முதல்தடவை. மேலும் தனக்கு பித்தளை, செம்பு முதலிய பாத்திரங்களில் சாப்பிடத் தெரியாதென்று சுதர்சனன் பெண்சாதி சொன்னவுடனே "அது வாஸ்தவந்தான், மற்றவர்களு மப்படியே செய்வது நலமென்று நினைக்கிறேன்" என்றாள். இப்படிக்கு பிறருடைய டம்பத்தைப்பார்த்து சத்தியவதிக்கும் டம்பத்தில் விருப்பமுண்டாகவே, அதற்குத் தகுந்தபடி செலவுமதிகரித்தது. ஒருநாள் சத்தியவதி சுதர்சனன் வீட்டிலிருந்து திரும்பிவந்தவுடனே தர்மசீலனைப் பார்த்துச் சொல்லுகிறாள். "சுதர்சனன் எவ்வளவு பணக்காரனாயிருக்கவேண்டும்."

தர்மசீலன்:—நீ சொல்லுவது சரியல்ல, சுதர்சனனுக்கு நம்மைப் பார்க்கிலும் அதிக வரும்படி ஒன்றும் வரவில்லை.

சத்தியவதி.—அதிக வரும்படி வரவில்லையா? அப்படியானால் அவர்கள் வீட்டில் அவ்வளவு விலையுயர்ந்த சாமான்க ளிருக்கின்றனவே, அவைகளெப்படி வாங்கப்பட்டன?

தர்மசீலன்.—அது எனக்குத் தெரியாது; ஆனால் சுதர்சனன் தன் பெண்சாதி குடித்தனம் நடத்துவதில் வெகு சாமர்த்தியசாலியென்று சொல்லுகிறான். நீயும் அவளிடத்தில் குடித்தனம் பண்ணுகிற உபாயங்களைக் கற்றுக்கொண்டால் வெகு நன்றாயிருக்குமென்று நினைக்கிறேன்.

அப்படியே சத்தியவதி தன் தோழியிடஞ்சென்று குடித்தனம்பண்ணு முபாயங்களை தனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்க, சுதர்சனன் பெண்சாதி சிறு வரும்படியை வைத்துக்கொண்டு அவ்வளவு டம்பமாய் வெளிக்குத் தோன்றுவதைப்பற்றி வெகு பெருமைபாராட்டிக்கொண்டு சொல்லுகிறாள்.

"முதலாவது நாமிவ்வுலகத்தில் முன்னுக்கு வரக்கூடிய வழியெப்படியென்றால் கொஞ்சம் டம்பமாய்க் குடித்தனம் பண்ணுவதினால்தான். எங்களுடைய வரும்படி இன்னதென்று உனக்குச் சொல்லுவேனாகில், நீ வெகு ஆச்சரியப்படுவாய். ஆனால் எனக்கு அநேக உபாயங்கள் தெரியும். நீ உன் வேலைக்காரர்களுக்கு என்ன சம்பளம் கொடுக்கிறாய்?" இதற்கு சத்தியவதி பதில் சொன்னவுடனே பின்னும் சொல்லுகிறாள்: "நீ உன் வேலைக்காரர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுக்கிறாய். அதிருக்கட்டும், உன்னுடைய ஆடைகள் இவ்வளவு மட்டமாயிருக்கின்றனவே. நீ வேறு ஆடைகள்தானுடுக்கவேண்டும். உன் புருஷனுக்கு வருகிறவரும்படிக்கு நீ இப்படிதானா ஆடை உடுக்கிறது" என்றாள்.

சத்தியவதி—"அப்படியிருந்துமெங்களுடைய செலவு முன்னிருந்ததைப் பார்க்கிலும் இப்பொழுது வெகு அதிகரித்துவிட்டது. அது யாதுகாரணத்தாலோ எனக்குத் தெரியவில்லை, ஆனால் என்னுடைய குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூடத்தில் செலவு அதிகமாகத்தானாகிறது."

தோழி—"அது முற்றிலும் தப்பிதம், நான் என் குழந்தைகளை பள்ளிக்கூடத்திற்கு அனுப்புகிறதேயில்லை. ஏனென்றால் அங்கு படிக்கும் ஏழைப் பிள்ளைகளோடு சேர்ந்து இவர்களுக்கு வெகு கெட்ட வழக்கங்களுண்டாகிவிடும். ஆகையால் நானே அவர்களுக்குக் கற்பித்து வருகிறேன்."

சத்தியவதி—"ஆனால் அவர்கள் பள்ளிக்கூடத்தில் கற்பதைப்போல வீட்டிலவ்வளவு நன்றாய்க் கற்றுக்கொள்ளக் கூடுமோ?"

தோழி—"ஆகா, நீ இவ்வளவு புத்திசாலியாயிருந்துமிப்படிக் கேட்கிறாயே! குழந்தைகளுக்குப் போதிப்பதில் தாயைப்பார்க்கிலும் அயலார்களுக்கு வெகு திறமையுண்டோ? நான் சொல்லியபடி செய்வாயாகில் பள்ளிக்கூடத்தில் செலவு செய்யும் பணமுழுமையும் உனக்கு மிகுதிதான். ஆகையால் நீயே உன் குழந்தைகளுக்குக் கற்பிக்கவேண்டும்" தன்தோழி சொல்லிய விஷயத்தை சத்தியவதி முற்றிலு மொப்புக் கொள்ளாதபோதிலும் பள்ளிக்கூடத்தில் செலவாகும் பணம் வெகுஅதிகந்தானென்று நினைத்தாள். ஆகையால் தர்மசீலனோடு யோசித்து பிள்ளைகளை குறைந்த சம்பளமுள்ள வேறொரு பள்ளிக்கூடத்திற் கனுப்பினாள்.

இப்படி தாய் தந்தையர்கள் அதிகச் செலவுசெய்து டம்பம் பண்ணிக்கொள்வதின் பலன் பிள்ளைகளுடைய தலையில் விழுகிறது. அப்படிப்பட்ட தாய் தந்தையர்களுக்கு தங்கள் பிள்ளைகளிடத்தில் வெகு விசுவாசமிருந்தபோதிலும், அவர்களிடத்திலுள்ள குறைவுகளை கவனிக்கமாட்டார்கள். குறைவென்றால் ஆடையாபரணங்களில் குறைவல்ல. கல்வியில் குறைவு. சுதர்சனன் பெண்சாதி பள்ளிக்கூடத்தைப்பற்றிச் சொல்லியதை முற்றிலும் நம்பாத போதிலும், சத்தியவதி அவள் சொல்லிய மற்ற விஷயங்கள் யாவற்றையும் நம்பத் தலைப்பட்டாள். ஆகையாலிதுமுதல் சத்தியவதி விலையுயர்ந்த ஆடையாபரணங்கள் தரித்து தினந்தோறும் வெகு நேர்த்தியாய் அலங்கரித்துக்கொண்டாள். இதுவரையில் தன் பெண்சாதியினுடைய நற்குணத்தையும் அறிவையும் மட்டும் பார்த்து சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்த தர்மசீலன், இப்பொழுது அவளுடைய அழகையுங் கண்டு வெகு சந்தோஷமடைந்தான். இப்படிக்கு ஒவ்வொரு ஆபரணமும் சத்தியவதியினழகை அதிக நேர்த்தியாய் எடுத்துக்காட்டுவது கண்டு தர்மசீலன் அடிக்கடி புதிய நகைகள் வாங்கிக்கொண்டே வந்தான்.

இப்படியிருக்க ஒருநாள் சத்தியவதி ஒருஏழைக்கு தர்மஞ் செய்வதற்காக தர்மசீலனை பணங்கேட்டபோது "அவ்வளவு பணமெப்படிக் கொடுக்க முடியும்" என்று அவன் சொன்னதைக்கேட்டு வெகுஆச்சரியமுற்று "கொடுக்க முடியாதா? இதுவரையில் நாம் தர்மம்கொடுத்து வந்ததைப் பார்க்கிலும் இது அதிக தொகையல்லவே" என்றாள்.

தர்மசீலன்—"ஆனாலிப்பொழுது நம்முடைய செலவு வெகு அதிகரித்துவிட்டதே"

சத்தியவதி—"ஆம், நம்முடைய வரும்படியும் அதிகரித்திருக்கிறதல்லவா? (தர்மசீலன் தலையைக் குனிந்துகொண்டு யோசனை செய்தான்) நாம் ஒருமேஜை வாங்குவதாக உத்தேசித்திருந்தோமல்லவா? இப்பொழுது மேஜை வாங்குவதை நிறுத்திவிட்டு அந்தப்பணத்தை தர்மஞ்செய்தாலென்ன"

தர்மசீலன்.—"உன் இஷ்டப்படிசெய்."

சத்தியவதி.—சற்று பேசாமலிருந்துவிட்டு "ஏனப்படிச் சொல்லுகிறீர்கள். என்னிஷ்டப்படிசெய்யவாவதென்ன. தங்களிஷ்டப்படித்தான் நான் நடக்கவேண்டும்."

தர்மசீலன்.—"மேஜை வேண்டுமென்று முதலில் சொன்னது யார்? நீதானே."

சத்தியவதி.—"மெய்தான். ஆனால் மேஜை வேண்டியது அவசியந்தானென்று சுதர்சனன் பெண்சாதி சொல்லியிராவிட்டால் எனக்குஅந்த ஞாபகமே வந்திருக்கமாட்டாது.

தர்மசீலன்.—"சுதர்சனன் பெண்சாதியை உன் குலதெய்வமென்று எண்ணிக்கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது. அவள் நமக்கு மேஜை வேண்

டியதுதா னென்று சொன்னதினுல்தாஞு நீயும் வேணுமென்ருய்.''

சத்தியவதி—''அப்படியல்ல. நானும் ஒரு மேஜை யிருந்தால் நமக்கு வெகு சௌகரியமா யிருக்கு மென்று நினைத்தேன். மேலும் மேஜையிருந் தால் இவ்வறை வெகு நேர்த்தியாயிருக்கும். ஏ னென்ருல் மத்தியில் தொங்கிக்கொண் டிருக் கும் விளக்கு—''

தர்மசீலன்.—''விளக்கொரு காரணமா? மேஜையா விளக்கினின்று தொங்கிக்கொண் டிக்கிறது? இல்லையே.''

சத்தியவதி.—''சரிதான், மேஜைவேண்டியது அவ சியமில்லைத்தான். சுதர்சனன் பெண்சாதி அ தைப்பற்றி சொல்லாவிட்டால் அது எனக்குத் தோன்றியே யிராது.''

தர்மசீலன்,—(கோபத்தோடு) ''மறுபடியும் சுதர்ச னன் பெண்சாதியா? அவளுடைய சிநேகம் உனக்கு அநர்த்தம் உண்டுபண்ணுமென்று தோ ன்றுகிறது. (சத்தியவதிக்கு கண்ணில் நீர் தளு ம்பிற்று.) மேஜையை விட்டுவிடுகிறதா, தர்மத் தை விட்டுவிடுகிறதா வென்று உனக்கு யோச னை தெரியாததினுல், நான் இரண்டுக்கும் பண ம் தருகிறேன். உன்தோழியுடன் சென்று உன் க்கு இஷ்டமான மேஜையை வாங்கிக் கொ ண்டுவா.''

சத்தியவதி.—என்னை அவ்வளவு புத்தி யில்லாதவ ளென்று நீங்கள் நினைக்கலாமா? என்று மனதிர ங்கும்படி வெகு வணக்கமாய்ச் சொன்ன வுட னே தர்மசீலனுக்கு கோபந்தணிந்து சந்தோஷ முமுண்டாயிற்று.

பின்னும் சிலநாள் சென்றபிறகு அறை நடுவிற் போடும்படியான ஒருமேசையும் அதின்பேரில் பூங் கொத்துகள் வைக்கும்படியான ஒரு பீங்கான் சட்டி யும் வாங்கி வைத்தார்கள். சத்தியவதிக்கு அகப் பட்ட பணக்கார சிநேகிதர்கள் சுதர்சனன் பெண் சாதி மட்டுமல்ல. தன் புருஷன் கோடீசுவரனு யிரு ப்பதினுல் கொஞ்சமேனுங் கணக்குப்பாராமல் செல வழிக்கத் திறமையுள்ள செல்வகுமாரன் பெண்சாதி யும் சத்தியவதிக்கு சிநேகமானுள். தர்மசீலனும் பணக்காரர்களுடைய சிநேகிதனுனன். ஆகவேவெகு தரித்திரர்களைப்போல் செட்டாகக் குடித்தனஞ் செ ய்தால் தங்களுடைய சிநேகிதர்களை அவமானஞ் செ ய்ததுபோ லாகுமென்று நினைத்து இவர்களும் பணக் காரர்களைப்போலவே குடித்தனம்பண்ண வேண்டி யதாயிற்று. சத்தியவதியோ ஏதோ அதிர்ஷ்டவசத் தினுல் தனக்கு நல்ல சிநேகிதர்களாய் மூவர் கிடைத் தார்களென்றுநினைத்தாள். சுதர்சனன்பெண்சாதிக்கு உலகத்திலுள்ள எல்லா விசேஷங்களும் அவ் வூரிலு ள்ள எல்லாமனிதர்களையும் தெரியும். செல்வகுமாரன் பெண்சாதிபணத்தைக் கண்ணைமூடிக்கொண்டு செல வழிக்கக்கூடியவள். அலங்காரவிநோதி ஆடையாபர ணங்களில் புது புது மாதிரியாய் உள்ளவைகளை தரித் துக்கொள்ளப்பட்டவள்.

வெளிக்குத் தாங்கள் வெகு பணக்காரர்க ளென்று தோன்றும்படி டம்பமாய்க்குடித்தனம்செய்யத்தலைப் பட்டதால் சில விஷயங்களில் சத்தியவதி வீட்டுக் குள் செட்டாக விருக்கும்படி நேரிட்டது. அதாவது வேலைக்காரர்கள் சமையல்செய்யும்பொழுதுசாமான் களை வீண் செலவு செய்யாமலும் திருடிக்கொள்ளா மலு மிருக்கிருர்களா வென்று வெகு ஜாக்கிரதையா ய்ப் பார்த்து வரவேண்டியதாயிற்று. ஆகையால் வேலைக்காரர்கள் இப்படி சத்தியவதி பூசினிக்காய் போகிறவிடம் தெரியாமல் கடுகுபோகிற விடத்தை ஆராய்வதைக்கண்டு அதிர்ப்தி யடைந்து வேலையை விட்டு நீங்கிவிட்டார்கள். இப்படி அடிக்கடி புது வேலைக்காரர்களை வைத்துக்கொண்டு அவர்களுக்குச் சரியாய் வேலைசெய்யத் தெரியாததினுல் சத்தியவதி வெகு துன்பமடைந்துவந்தாள்.

(இன்னும் வரும்.)

கே. ஜெயராமய்யர், பி. ஏ.

---

## புருஷன்மனைவி சம்வாதம்.

(311-வது பக்கத்தொடர்ச்சி.)

புருஷன்.—நல்ல குலத்தில் பிறந்து, நன்ருய்க்கற்று தர்மங்களை உணர்ந்த பெண்கள் நீ சொல்லுகிற படி இருக்கமாட்டார்கள். அரை குறையாய்ப் படித்து அகந்தைபிடித்த இரண்டொரு அறிவி லிகள்தான் உன்னைப்போல், இனு இனம் தெ ரியாமல் குடித்தனத்தைச் சீரழிக்கும்.

மனைவி.—நான் குடித்தனத்தை என்னசீரழிக்கிறே ன். என்னக்காளுக்கும் தங்கைக்கும் என்ன வாரிவிடுகிறேன். பிறந்தவீட்டுக்கு மூட்டை மூட்டையாய்ச் சோமனும் துப்பட்டாவும், மோகராவும் பவுனும் கட்டிவிட்டதை எப்போ து கையும் களவுமாகக் கண்டு பிடித்தீர்கள்?

புருஷன்.—சந்தர்ப்பப்பட்டால் எல்லாம் கட்டிவிடு வாய். அதற்கு என் வீட்டில் இடம் ஒன்று மில்லை. வாரிவிடுவதைத் தவிர ஸ்திரீகளுக்கு குடும்பத்தைச் சீரழிக்கிறதற்கு எத்தனையோ வகை உண்டு.

மனைவி.—எனக்காக எவ்வளவு செய்து விட்டீர்கள். வாழ்க்கைப்பட்டு, இந்தவாசலில் புகுந்து, இரு பதுவருஷம் ஆச்சுது. ஓர்சுருட்டு நவிக்கைக் கும், ஜகமிரட்டிப் புடவைக்கும் ஆசைப்பட்டு

கேட்டுக்கொண்டிருந்தேன். இலவுகாத்த கிளி மாதிரியானேன். வாயை வலித்ததே ஒழிய வேறு பிரயோஜனமில்லை. கிழவியாய்ப் போனபிறகு எனக்கு என்னத்திற்கு. இனிமேல் வாங்கிக்கொடுத்தாலென்ன, கொடுக்காவிட்டாலென்ன. அழிக்கிறவர்கள் அழிக்கிறார்கள்; அதெல்லாம் கண்ணுக்குத் தெரிகிறதில்லை, நான் ஒரு கொத்துப்பூவுக்கென்று ஒரு காசு கேட்டால் அதற்கு ஆயிரங்கணக்குப்பார்க்கிறீர்கள். ஒவ்வொருவீட்டில் போய்ப்பாருங்கள். குருணிகுருணியாய் அரிசிபோட்டு கொய்யாப்பழம் வாங்குகிறார்கள். அமிர்தம் விற்றாலும் அனாக்கை அரிசிபோட்டு ஆசைக்கு நான் வாங்கினதில்லை. இப்படிக்கெல்லாம் வாயை அடக்கி வயிற்றை ஒடுக்கிப் பாடுபெட்டதற்குப் பலன் கடைசியில் ஏசல்தான்.

புருஷன்.—படிப்பில்லாத ஸ்திரீகளுக்கு என்ன செய்தாலும் திருப்தியில்லை. கணக்கு வழக்குத் தெரிகிறதில்லை. கடுகுபோகிறவிடம் தெரியும், பூசணிக்காய் போகிறவிடம் தெரியாது.

மனைவி.—அப்படி என்னதெரியாமல் இருக்கிறேன். எல்லாந்தெரிந்துதான் இருக்கிறது. நாலுமாத காலமாய், காலமே எழுந்திருந்தால் கால் கை ஓய்ந்துபோகிறது. சாப்பிட்டவுடனே படபட என்று வருகிறது. வேலைசெய்யத்தள்ளவில்லை. ஒரு சமையற்காரனை வைத்துக்கொண்டால் சாதகமாயிருக்கும். ஆனால், ஒருமாஸ சாமான்களை ஒருநாளில் கொட்டி யிறைத்து குடித்தனத்தை அழிப்பனே; 'ஊணில் மிகுவது உழவில் மிகாது' என்று பின்னையும் யோசித்து பிராணனைக் கையில்பிடித்துக்கொண்டு, மெள்ளமெள்ள நகர்ந்தாவது என்வேலையை முடிக்கிறேன். என்ன தலையாலே நடந்தாலும் யாருக்குநன்றி.

புருஷன்.—நிஷ்ரேப்பட்டுக்கொண்டு வேலை செய்வதைவிட பரிசாரகன் ஒருவனை வைத்துக்கொள்வது மிகவும்நலம்.

மனைவி.—இப்படிக்கு சூரியோதயம் முதல் நடுராத்திரிவரையில் மூச்சுவிட உட்காராமல் உழைத்துக்கொண்டிருக்கும் பொழுதே குடித்தனத்தை அழிக்கிறே னென்கிறீர்கள். கத்திரிபாவலி கல்லுதிர்ந்து வருஷம்ஒன்றாயிற்று. அதைப்பிரித்துக் கட்டிக்கொடுக்கக் கையில் பணமில்லை என்கிறீர்கள். எனக்காக தாதிக்கும், பரிசாரகனுக்கும் சம்பளம் நன்றாய்க் கொடுப்பீர்கள். அப்படிக்கெல்லாம் கேட்டால் வீட்டைவிட்டு உடனே விரட்டி விடுவீர்கள்.

புருஷன்.—படிப்பு இல்லாத பெண்களுக்கு நெடுமையும், கொடுமையும் தவிர வேறே பேசத் தெரியாது.

மனைவி.—நான் என்ன நெடுமையும் கொடுமையும் எடுக்கிறேன். இருக்கிற கஷ்டத்தைச் சொன்னால் யாருக்குங் கோபந்தான். வீடுகூட்டுகிற விளக்குமாறு ஒப்பந்தம் நான் உங்களுக்கு.'விளக்கும் பொழுது வெளியிலே இல்லாத போது மூலையிலே;' நான் எதுகேட்டுச் சந்தோஷமாய்க் கொடுத்தீர்கள். எந்த நகை ஒடிந்தாலும் உள்ளே போட்டு வைக்கிறதே ஒழிய, ஒக்கப் பண்ணிக்கொடுங்களென்று கேட்கிறதேஇல்லை.

புருஷன்.—அறிவில்லாத ஸ்திரீகளுக்கு எப்பொழுது பார்த்தாலும் நகைப்பைத்தியந்தான். நகை, நகை என்று புருஷன் பிராணனை எடுத்து விடுகிறார்கள்.

மனைவி.—அப்படிக்கென்ன உங்களை உபத்திரவப்படுத்தி நீங்கள் எனக்கு ஆயிரம், பதினாயிரத்துக்கு நகைபோட்டுவிட்டது.

புருஷன்.—இப்பொழுது உனக்கு எவ்வளவு ரூபாய் நகை இருக்கிறது தெரியுமா?

மனைவி.—கழுத்துக்கு சரட்டட்டிகையும், காரையும், காதுக்கு ஓர் ஓலையும், பாவலியும், கைக்குக்காப்பும், சங்கலியும் இருக்கிறது. ஒடிந்ததும் ஒடியாதது எல்லாமாய்ச் சேர்ந்து எட்டு நூறுக்கு இருக்கலாம்.

புருஷன்.—நிச்சயமாய் இவ்வளவுதான் என்று தெரியுமா?

மனைவி.—நான் என்ன நிச்சயத்தைக் கண்டேன். வெளியிலே போகிறேனா, வாசலிலே போகிறேனா; பள்ளிக்கூடத்தில் படித்தேனா; கணக்கு வழக்குப்பார்க்கிறேனா; இந்தக் காலத்துப்பெண்டுகளைப்போல் ஒழிந்தவேளையிலே வீடுவீடாய் வம்புக்குப்போகிறேனா? நான் நகையின் விலையைக் கண்டபடி?

புருஷன்.—பிறகு "எண்ணூறு" என்று எப்படி நிதானித்தாய்?

மனைவி.—நாத்தனார் என்னைப்போலதான் பூட்டிக்கொண்டிருக்கிறாள். ஆனால் என்னைவிட அவளுக்கு காலிலே கொலுசும், மூக்கிலே மூக்குத்தியும் இருக்கிறது. மாமியாரும் நாத்தனாரும் ஒருநாள் பேசிக்கொண் டிருக்கும் பொழுது ஏதோ பத்துநூறுக்கு இருக்கென்று சொல்லிக் கொண்டார்கள். அதைக்கொண்டு எனக்கு எட்டுநூறுக்கு இருக்குமென்று நிச்சயம்பண்ணினேன்.

புருஷன்.—உனக்கு இப்போது இரண்டாயிர ரூபாய்க்குமேல் நகை யிருக்கிறது. காது ஓலையும் காரையும் மாத்திரம் ஆயிரத்திருநூறு ரூபாய் விலை. இவ்வளவு ரூபாய் நகையில் முடங்கினதினாலே நஷ்டம் எவ்வளவு தெரியுமா?

மனைவி.—நஷ்ட மென்ன! பணமாயிருக்கிறது நகையாயிருக்கு! பணமாயிருந்தால் செலவழிந்துபோகும், நகையாயிருந்தால் அழியாமல் இருக்கும்.

புருஷன்.—நகையில் போடாமல், நிலத்திலே மாத்திரம் போட்டிருந்தால், வருஷா வருஷம் வீட்டுக்கு சாப்பாட்டுக்கு வேண்டிய நெல்லுகிடைக்கும். வட்டிக்கு கொடுத்திருந்தோமோ, வட்டியைக்கொண்டு, ஒருவருஷத்துக்கு வேண்டிய மேன் சாமான்கள் வாங்கலாம்.

மனைவி.—நகையைவிட நிலமென்ன விசேஷம்? ஒரு வருஷம் விளையும், ஒரு வருஷம் விளையாது: ஒருவரிடத்தில் கடனாகக் கொடுத்தால், பணம் திரும்பிவந்தாலும் வரும், வராமல் போனாலும் போகும். நகையாக இருந்தால் மோசமில்லை, அசையாமல் கிடக்கும்.

புருஷன்.—நகைக்கு ஏன் மோசமில்லை. திருடர்கள் கொண்டுபோகக்கூடும். மேலும், இரண்டாயிரம் ரூபாயை வட்டிக்குப் போடும் பட்சத்தில் வருஷம் ஒன்றுக்கு நூற்றுக்கு ஒன்பது ரூபாய் விகிதம், நூற்றெண்பது ரூபாய் கிடைக்கும். இந்த வட்டியைத்தொடாமல், முதலுடன் சேர்த்து வட்டிக்குவட்டிவாங்கும் பட்சத்தில்,எட்டு வருஷத்தில், நாலாயிர ரூபாயாகும். இப்படியிருக்க நகைசெய்வதினால், பத்தர்கள் குறைந்தபட்சம் நூற்றுக்கு ஐந்து விகிதம், நூறு ரூபாய்போல் பற்றிக்கொள்ளுகிறார்கள். எட்டு வருஷம் நகையைப் போட்டுக் கொண்டிருந்தால், தேய்வினாலும் தருவினாலும், இடை குறைந்து, ஒன்றுக்கு முக்காலாய் விலைபோகும். ஆயிரத்தைந்நூறு ரூபாய்தான் கிடைக்கும். வட்டிக்குபோடுவதை விட்டு நகை செய்வதினால், ஒரு குடும்பத்துக்கு எட்டு வருஷத்துக்குள் இரண்டாயிரத்தைந்நூறு நஷ்டம் வருகிறது. அதாவது வருஷம் ஒன்றுக்கு சுமார் முன்னூறு நஷ்டம். மாசம் ஒன்றுக்கு ரூபாய் இருபத்தைந்து விகிதம் ஆகிறது. ஒரு சமயற்காரனையும் தாதியையும் வைத்துக்கொண்டால் இவ்வளவு நஷ்டம் வரமாட்டாது.

மனைவி.—அவ்வளவு நஷ்டம் வருகிறதோ. உங்கள் கணக்கெல்லாம் எனக்கு புரியவில்லை. ஒவ்வொருவீட்டில், புருஷன் நாலாயிரம், பதினாயிரத்துக்கு நகைசெய்து பெண்டாட்டிக்குப் போடுகிறான். இவ்வளவு நஷ்டம் வந்தால் போடுவார்களோ. என்னை ஏய்க்கிறதற்காக இப்படிக் கெல்லாம் சொல்லுகிறீர்களோ என்னமோ.

புருஷன்.—படித்த பெண்களைக்கேட்டுப்பார். நான் சொல்லுகிறது வேடிக்கையென்றும் வாஸ்தவமென்றுந் தெரியும், இல்லாவிடில் நீயாவது படித்து கணக்கு வழக்குத் தெரிந்து கொண்டால், நான்சொல்லுவதெல்லாம் உனக்கு நன்றாய் விளங்கும்.

மனைவி.—நல்லது, இத்தனை வயதுக்கு மேல் கையில் மாக்கல் பலகையும், காலில் ஜோடும் மேலே சட்டையும் இடுப்பில் பாவாடையுமாக, வீதியோடே பள்ளிக்கூடத்துக்குப் போகிறேன்? நான் பெண்ணாய்ப்பிறந்து வாழ்கிற வாழ்வுக்கு அது ஒன்றுதான் குறைச்சல். பெரிய பெண்டுகள் பள்ளிக்கூடம் போவார்களோ!

புருஷன்.—குளங்களுக்கும், கோவில்களுக்கும், பகலிலும், பாதிராத்திரியிலும் கண்டவர்கள் மேலேபட இப்பொழுது ஸ்திரீகள்போக வில்லையா. ஏன்பள்ளிக்கூடத்துக்குப்போகக்கூடாது?

மனைவி.—நீங்கள் சொல்லுவது புதுமையா யிருக்கிறது. கோவில் குளங்களுக்குப் போவது வழக்கம். அதில் பாதகம் இல்லை. பெரிய பெண்டுகள் பள்ளிக்கூடம் போதல் பாதகமில்லையென்று இன்றைக்கு நீங்கள் சொல்லத் தான் கேட்டேன்.

புருஷன்.—இது வரைக்கும் நம்முடைய தேசத்தில் ஸ்திரீகள் படிக்கக்கூடாதென்றும், வெளியிலே வாசலிலே போகக்கூடாதென்றும் இருந்தது. இப்பொழுது கொஞ்சகாலமாக, ஸ்திரீகளைப் படிக்கவைப்பது அவசியமென்று பலபேர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டு, பெண்பாடசாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. பத்துப் பதினைந்து பெரிய பெண்கள் போய்ப்படித்தால் பள்ளிக்கூடம்போவது, கோவிலுக்குப்போவது போல வழக்கத்தில் வந்துவிடும்.

மனைவி.—ஒருக்காலும் அந்தவழக்கம் வரமாட்டாது. கோவிலுக்கு ஸ்வாமி தரிசனத்துக்காகப் போகிறோம். பள்ளிக்கூடத்தில் என்னகாரியம். அப்படி பெரியபெண்கள் போகத் தலைப்பட்டார்களோ, இராச்சியம் ரொம்பக்கெட்டுப்போகும்.

புருஷன்.—ஸ்திரீகள் படித்தால் நமது தேசம் விர்த்திக்கு வருவதைவிட்டு எப்படிக்கெடும்?

மனைவி.—சின்னஞ்சிறிதுகளா யிருந்தால் பாதகமில்லை. பெரிய பெண்பிள்ளைகள் வெளியே போக ஆரம்பித்தால், அவாளுக்கு மனதுதுணிந்துவிடும்; ஆண்பெண் என்கிற வியவஸ்தை இல்லாமல், இஷ்டப்பட்ட விடத்திற்குப் போவதற்கும், வேண்டியவர்களுக்குக் கடிதாசுஎழுதவும், லச்சையில்லாமல் எல்லாருடன் பேசுவதற்கும், தைரியங்கொண்டுபோகும். லோகம் தலைகீழாகமாறி விடும். நாமும் வெள்ளைக்காரச்சிமாதிரி ஆய்விடுவோம்.

புருஷன்.—வெள்ளைக்காரச்சி மாதிரி மிகவும் கெடுதலோ. அவர்கள் மாதிரி நமதுதேசத்து ஸ்திரீ

கள் ஆகும்பொழுது தான் நமது இராச்சியத்துக்கு க்ஷேமம்.

மனைவி.—அவர்கள் மாதிரியில் கெடுதி என்ன? ஒன்றுமில்லை! நான் இரண்டு நாளைக்கு அவர்கள் மாதிரி நடந்தேனாகில் உங்களுக்குத்தெரியும்.

புருஷன்.—அவர்கள் வீட்டைப்போய்ப்பார், உடுப்பைப்பார்; எல்லாவற்றையும் எவ்வளவு சுத்தமாயும் அலங்காரமாயும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். புருஷன் செய்யவேண்டிய வேலைகளில் பாதி அவர்கள் செய்து விடுகிறார்கள். ஒழிந்தவேளையில் எப்போதும் படித்துக்கொண்டிருக்கிறார்கள். சாமான் வாங்கவேண்டி யிருந்தால், ஷாப்புக்குநேரில் போய் வாங்குகிறார்கள். நகை ஒன்றும் போட்டுக்கொள்ளுகிறதில்லை. அதினால், திருடர்கள் பயமின்றி ஜனசங்கமில்லாத இடங்களில் வீடுகட்டிக்கொண்டு வசிக்கிறார்கள். அவர்களுடைய இல்வாழ்க்கை மிகவும் சுகம். விவேகிகளாய் இருப்பதினால், கொண்ட புருஷனுடைய மனம் கோணாமல், அவனுடைய கஷ்ட நஷ்டங்களை அறிந்து நடக்கிறார்கள்.

மனைவி.—ஆயிரத்தில் ஒரு வெள்ளைக்காரச்சி நல்லவளாயிருக்கலாம். வெளிக்கு எல்லாம் பகட்டுத்தான். உள்ளே புகுந்துபார்த்தால் ஊழலெல்லாம் வெளிப்படும். தூரத்து பச்சைதான். கிட்ட நெருங்கினால் கண்போய்விடும்.

புருஷன்.—ஏதோ வெள்ளைக்காரர்கள் வீட்டில் நெருங்கிப் பழகினவளைப்போல பேசுகிறாயே.

மனைவி.—நேரே பார்த்துத் தான் தெரியவேணுமோ? கேட்டால் தெரியாதோ! விசாலாட்சி மாப்பிள்ளைக்கு பட்டணத்தில் உத்தியோகமாம். அவன் பெண் வெங்கடலட்சுமி பிரசவிக்க பிறந்தாம் வந்திருக்கிறாள். அவள் வெள்ளைக் காரச்சியைப்பற்றி சொல்லுகிறாள், சொல்லுகிறாள், காதுகொடுத்து கேட்கச் சகிக்கவில்லை!

புருஷன்.—என்ன சொல்லுகிறார்கள் ?

மனைவி.—வெளிக்கு இவ்வளவு சுத்தமாயிருக்கிறார்களே. வீட்டில் அவர்களுக்குப் பறையனும், பறைச்சியுந்தான் சமைத்துப்போடுகிறார்களாம். சாயங்கால வேளையில், குழந்தையை குசினிக்காரச்சி யிடத்தில் விட்டுவிட்டு தினமும் சமுத்திரக் கரைக்கு காற்றுவாங்கவந்து விடுகிறார்களாம். அகமுடையானைவிட்டு, அசல் புருஷன் கையைப்பிடித்துக்கொண்டு ஆநந்தமாய் பேசிக்கொண்டு அங்கும் இங்கும் போகிறார்களாம். கவர்னர் வீட்டில் ஒருநாள் நிலாச்சாப்பாடாம். ஊரிலுள்ள பெரிய துரைவீட்டு துரைசாணிகளெல்லாம் வந்திருந்தார்களாம். சாப்பாடு ஆனவுடனே குடித்துவிட்டு, கண்ட புருஷர்கள் கையைப்பிடித்துக்கொண்டு, மாரைப்பாதி திறந்துகொண்டு கன்னா பின்னாவென்று கூத்தாடினார்களாம்,

புருஷன்.—அவாள் ஜாதிவழக்கம்; அதினாலே கெட்டவர்களென்று சொல்லிவிடலாமா.

மனைவி.—நம்முடைய ஜாதியில் கட்டுங் காவலுமாயிருக்கும் பொழுதே, எவ்வளவோ கெட்டுப்போகிறது. இப்படி ஒரு தடையுமில்லாமல் குடித்துவிட்டுக் கூத்தாடினால், பிசகே இருக்காது!

புருஷன்.—வாஸ்தவ மாகவே பிசகு இருக்கமாட்டாது. நமமைப்போல அவர்களும் தெய்வத்துக்குப் பயந்தவர்களானதினால், கூத்தாடுவதினால் பிசகு நேரிட மாட்டாது.

மனைவி.—அவாளுடைய தெய்வம் இப்படி குடித்துவிட்டு, ஆண் பெண் வியவஸ்தை இல்லாமல் கூத்தாடச் சொல்லியிருக்கா? நல்ல தெய்வம்! மனுஷிய ஜென்மமெடுத்து மானத்துக்கு பயப்படுகிறவர்கள் ஒருபொழுதும் இப்படிச் செய்ய மாட்டார்கள்.

புருஷன்.—மனது காவலை ஒழிய, மதில் காவலாக மாட்டாது. மனது சரியாயிருக்கும் பட்சத்தில் ஒருவரோடு பேசுவதினாலும், பழகுவதினாலும் பாபம் நேரிடமாட்டாது.

மனைவி.—எல்லாம் வாய்ப்பேச்சுதான். அய்யோ! ஒருநாள் என்னூரிலே இருந்து சாம்பசிவன் வந்திருந்தான். எங்கள் வீட்டுக்கு அடுத்தவீடு; தாயாய்ப்பிள்ளையாய்ப் பழகினவன்; கூடப்பிறந்த பிறப்பைவிட அதிகம். அவன் தமையன் பெண்ணுக்கு ஏழு நிரம்பி எட்டாம் வயது. பிள்ளைபார்க்க வந்திருந்தான். சற்று நின்று ஊர் யோகக்ஷேமத்தை விசாரித்தேன். இதை வந்து நாத்தனார் உங்களிடத்தில் சொல்லிக் கொடுத்தாள். அதற்காக என்னை அடி அடியென்று அடித்தீர்கள். இன்னும் வெள்ளைக் காரச்சிமாதிரி இருந்துவிட்டேனானால் நன்றாய் சகிப்பீர்களே! தள்ளிவிட்டு இளையாள் கலியாணம் பண்ணிக் கொள்ளுவீர்கள்.

புருஷன்.—எழுதப் படிக்கத் தெரியாத ஸ்திரீகளுக்கு இடமே கொடுக்கக்கூடாது.

மனைவி.—படித்ததினாலே பதிவிரதையாகி விடுகிறார்களாக்கும். பார்க்கப்போனால் படிக்காதவர்கள் தான் புருஷனுக்கு அடங்கி இருக்கிறார்கள்.

புருஷன்.—படித்த புருஷர்கள் நல்லவர்களா? படிக்காதவர்கள் நல்லவர்களா?

மனைவி.—நான் எந்தப்புருஷர்களைப் பார்த்தேன்; யாரோடு பேசி இருக்கிறேன். எனக்கு என்ன தெரியும். நீங்கள்தான் சொல்லுங்கள்.

புருஷன்.—படித்தவர்களே நல்லவர்கள் படிப்பு விவேகத்தை விர்த்தி செய்யும் தெளிவான ஞானமும், பக்தியும், பரிசுத்தமும் உண்டுபண்ணும். படிப்பில்லாதவர்கள் மூடர்கள்.

மனைவி.—உங்களுடைய அம்மாவுக்கும் பாட்டிக்கும், என்ன படிப்புத்தெரியும்? அவர்கள் என்ன விவேகங் கெட்டிருக்கிறார்கள் !

(இன்னும்வரும்)

ஆர். சக்கரவர்த்தி ஐயங்கார், பி. ஏ.

## சிறுவர்க்கான ஜாலவினோதங்கள்.

### 19. ஜாலசம்மட்டி.

நீளமாயும் வாய் நெருக்கமாயுமுள்ள ஒரு புட்டியில் கால்பங்கு ஜலம் வார்த்து அடுப்பின்மேல் வைக்க, சற்றுநேரத்திற்குப் பின்பு புட்டிக்குள்ளிருக்கும் ஜலம் உஷ்ணத்தினால் கொதித்து நீராவியாய் புட்டிவாயின் வழியாய் வெளியில் புறப்படும். இவ்வாறானபின்பு புட்டியை அடுப்பினின்றும் எடுத்து சில விநாடியானபின், புட்டியின் வாயில் அழுத்தமாய் 'கார்க்கு' அடைத்து முத்திரை மெழுக்கால் முத்திரைபதித்து குளிர்ந்த இடத்தில் புட்டியை வைத்துவிடவும். நன்றாய் உஷ்ணம் ஆறினபின்பு புட்டியை எடுத்துக் கீழுமேலுமாகக் குலுக்க, உள் உலவும் ஜலம் கற்கட்டிகள்போல் புட்டிக்குள் தாக்கும்.

### 20. சூக்ஷ்ம கணிதம்.

ஆயிரம் போர்வீரர்களை ஒருவரிசையாக நிற்க வைத்து சேனாதிபதியானவன் அவ்வரிசையில் முதலில் நின்றவனுக்கு ஒரு பழமும், இரண்டாவது நின்றவனுக்கு இரண்டு பழமும் இவ்வாறே கடைசியில் நின்றவனுக்கு ஆயிரம் பழமும் அளித்தனன். பின்பு எல்லாரும் ஒரு பெரிய கூடையில் வாங்கின பழத்தை ஒருங்கேபோட்டுவிட்டனர். கூடையில் மொத்தம் எத்தனை பழமிருக்கும்? முதல் எண்ணிலிருந்து ஆயிரம் எண்வரையிலும் கூட்டி மொத்தஞ்சொல்ல அநேக நாழிகை பிடிக்குமல்லவா? இப்படிச் சொல்லாது 2-நிமிஷத்திற்குள் முழு மொத்தத்தையும் சொல்லவேண்டும். இது சொல்வதெப்படி?

விடை:—கடை எண்ணாகிய ஆயிரத்தையும் அதின் சரிபாதியாகிய ஐந்நூற்றையும் பெருக்கி வந்த தொகையோடு கடை எண்ணாகிய ஆயிரத்தின் பேர் பாதியாகிய ஐந்நூற்றைக்கூட்ட மொத்தம் வந்துவிடும்.

1000-கடைசித்தொகை
500-ஷை யின் பாதி

பெருக்கிவந்ததொகை 500000-இத்தோடு
ஆயிரத்தில் பாதியாகிய 500-ஐகூட்ட

மொத்தம் 5,00,500

இவ்வாறே முதல் எண் 1-ஆய் இருந்து முடிவெண் எவ்வளவு பெருத்த தொகையா யிருந்தபோதிலும் மேற்கூறிய விதிப்படிக் கணக்கிட எளிதில் மொத்தம் வந்துவிடும்.

### 21. ஈயக்குண்டு பாதிகள் ஒன்றாய்ச் சேர்தல்.

ஒரு ஈயக்குண்டை எடுத்துக் கூர்மையான கத்தியால் இரண்டாகக் கரடில்லாமல் வெட்டி, அப்படி மெதுவாயும் பளபளப்பாயு மிருக்கிறபொழுது இரண்டு பாதியையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கையால் அழுக்கி நெருக்கினபின் இரண்டும் ஒன்றாய்ச் சேர்ந்துவிடும். பின்பு இலேசாய்ப்பிரியாமல் வெகு கட்டாயத்தின் பேரிலேயே பிரியும்.

### 22. கற்பாளத்தைப் பிளக்கும் விதம்.

ஒரு கற்பாளத்தைப் பிளப்பதற்கு அதில் வரிசையாய் துவாரங்கள் செய்து ஒவ்வொன்றிலும் நீர் வார்த்து நெருக்கமாய்ப் பொருந்தத்தக்க மராப்புகளை நுழைத்து அந்த ஆப்புகளின் முகத்தில் தண்ணீரில் தோய்த்த சீலையை ஈரங்கொடுத்துக்கொண்டிருந்தால், தண்ணீரால் ஆப்புகள் உப்ப, பாளம் வெடித்துப்போகும்.

### 23. ஊசி சலத்தில் மிதத்தல்.

ஒருபாத்திரத்தில் நிறைய ஜலம் வார்த்து காற்று போக்கு வரவில்லா வீட்டில் வைத்து,சுமார் ச-அங்குலம் சுற்றளவுள்ள (Tissue Paper) காற்றுடி காகிதத்தை சமமாய்விரித்து ஜலத்தின்மேல் சாக்கிரதையாய் வைக்க அது மிதக்கும். இந்த காகிதம் ஜலத்தில் ஊறி அமிழ்ந்து போவதற்குமுன் துருவும் அழுக்கும் ஈரமுமில்லாத ஊசியைக் காகிதத்தின்மேல் மெதுவாய் வைக்க, காகிதம் ஊறி அமிழ்ந்து விட்டவுடன், ஊசி தண்ணீரின்மேல் பாரமில்லாத வஸ்துவைப்போல் மிதக்கும்.

### 24. நாடி ஓட்டம் பலபேர் ஒருங்கு காண்பது.

ஒரு மிளகிற் பேர்பாதியளவு மெழுக்கு உண்டையை கைநாடியின் மேல்வைத்து, ரசம்பூசின லேசான ஒரு சிறு கண்ணாடித்துண்டை மெழுக்கின்மேல் பதியவைத்து வெயிலில் பிடிக்க சூரியன் ஒளி கண்ணாடியினின்றுந் தெறித்து தூரத்தில் இருக்கும் சுவரில் விழும். இவ்வாறு விழாவிடின் கண்ணாடியைச் சற்று திருப்பிக்கொள்ளவும். இப்பொழுது சுவரில் இருக்கும் வெயிலைக் கவனித்துப் பார்ப்போமானால் நாடி ஓட்டப்படி வெயிலும் துள்ளும். சிரித்தாச் நாடிமூலமாய் இரத்தம் வேகமாய்ச் செல்லுகிறபடியால் நாடி துரிதமாய்த்துடிப்பதை சுவரில் தோன்றும் வெயிலைக் கவனித்து நோக்கின் நன்கு விளங்கும், இவ்வுபாயத்தினால் ஒரு வியாதியஸ்தனுடைய நாடியின் குணாகுணத்தை அநேகவைத்தியர்களும் ஒருங்கே ஏககாலத்தில் அறியுந்திறத்தை யடைவதோடு, நோயாளியை அணுகாமலே நாடிப்பலனைச் சொல்லலாம்.

### 25. தூள் வேட்டு.

இரண்டு மூன்று சிட்டிகை சுத்திசெய்த கந்தகப்பொடியோடு, கொஞ்சம் (Chlorate of Potash) க்ளோரட் ஆப் பொட்டாஷ் கலந்து உலர்ந்த கல்லின்மேல் வைத்துத் தேய்க்க, சாட்டி அடிபோல் ஓர்விதத் தொனிகேட்கும்,

### 26. ஜடபதார்த்தங்களின் பாசம்.

ஒரு பீங்கானில் நிறைய சலம்வார்த்து அதில் மிதக்கக்கூடிய கார்க்கு (Cork) துண்டுகள், கட்டைகள் இவைகளை ஒன்றுக்கொன்று சற்றுத்தூரத்தில் மிதக்கச்செய்ய, அவைகள் வரவரத் தானாய்ச்சமீபித்து ஒன்றாகச் சேர்ந்து, பின்பு தானாய்ப் பிரியமாட்டாது. கப்பல் முதலிய பெரியவஸ்துக்கள் சலத்தில் ஒன்றுக்கொன்று சமீபமாய் மிதந்துகொண்டிருந்தால் ஷை காரணத்தினாலேயே அவைகள் வரவரத் தானாய் சமீபிக்கும்.

இரண்டு ஈயக்குண்டுகளை ஒன்றோடொன்று படாமல் அரைக்கால் அங்குல தூரத்தில் ஒன்றின் பக்கத்திலொன்றை மெல்லிய கயிற்றால் கட்டி தொங்கவிட அவைகள் தங்கள் நேர்தூக்கைவிட்டு ஒன்றுக்கொன்று சற்று சமீபித்துச் சேரும்.

செங்குத்தான மலையின் பக்கத்தில் ஒரு குண்டைத் தொங்கவைத்தால் அது சரியான நேர் தூக்காய்த் தொங்காது, மலையின் பக்கமாய்ச் சற்று சாய்ந்து தொங்கும்.

ஒரு பாத்திரத்தில் ஜலம்கொதிக்கும்போது உண்டாகும் நீர்க்குமிழிகள், பாத்திரத்தின் மேற்புரம் இவைகளைக் கவர்வதினால் ஓரங்களிற் சேரும்.

நாம் வசிக்கும் இப்பூமிக்கும் இக்கவர்ச்சி குணமிருப்பதினாலே தான், மரத்தின் கனிகளும், பழுத்த இலைகளும், உயரத்தில் விட்டு விட்ட எப்பொருள்களும் பூமியின் பக்கமாய்ச்சென்று விழுகின்றன. பூமியினின்று உயரப் போகப்போக கவருந்தன்மையும்முறையின்படி குறையும். கடலோரத்தில்ஆயிரம் வீசைகொண்ட பாரத்தை வெகு உயரமுள்ள மலையின் சிகரத்தின்மேற் கொண்டுபோய் நிறுக்கும்பொழுது இடை சற்று குறையும்.

### 27. புகை மோதிரங்கள்.

*ஆடுங்காகித அட்டைகளால் அவ்வட்டைகள் எவ்வளவு அகலமிருக்கிறதோ அவ்வளவு உயரம், நிகளம் அகலமுள்ள ஒரு சிறு பெட்டி செய்து அப்பெட்டிக்கு யாதொரு சந்துமின்றி நன்றாய் ஒட்டிப் பின்பு ஒருபக்கத்தின் மத்தியில் முக்கால் பட்டாணியளவு வட்டமாகத் துளைசெய்து, பெட்டிக்குள் சுருட்டு புகையை நிரப்பிப் பின்பு துவாரத்தை நன்றாய் மூடி வீட்டுக்குள் காற்றில்லா இடத்தில் நின்றுகொண்டு பெட்டியின் வாயைத்திறந்து பெட்டியின் பக்கத்தில் சுண்டு விரலின் முனையால் வெகுமெல்லெனத்தட்ட பெட்டியின் வாயிலிருந்து புகைமோதிரங்கள் புதைவாணம்போல் புறப்படும். சுருட்டுப்புகை அகப்படாவிடின், பெட்டியின் சந்தில் நுழையத்தக்க அவ்வளவு கனமான கறுப்பு கந்தைத்துணியைச் சுருட்டி ஒருமுனையைக்கொளுத்தி பெட்டிக்குள் போட்டுவிட கந்தைத்துணி உள்ளே புகையப் புகைய பெட்டிக்குள் புகை சேர்ந்துகொண்டேயிருக்கும். எந்நேரம் வேணுமென்றாலும் இவ்வேடிக்கையைக் காட்டலாம்.

### 28. குருவி கூச்சல்.

ஒரு *கார்க்குத் துண்டைச் சலத்தில் சற்றுநேரம் ஊறவைத்துப் பின்பு ஒரு திரட்சியானபுட்டி, விளக்குச் சிமினி அல்லது ஒரு கண்ணாடிக்குழாய் இவைகளின்மேல் ஊறின கார்க்குத் துண்டால் பரபரவென்று தேய்க்க குருவிகளெல்லாம் கூட்டமாய்க்கூடி ஒன்றோடொன்று சம்பாஷிப்பதுபோல் கேட்கும். அண்டையில் பூனையிருந்தால் கூவுங் குருவிகளைக் கண்டுபிடிக்கவேண்டுமென்று நாலாபக்கமும் ஓடும்.

### 29. ஜலதிருஷ்டிக்கண்ணாடி.

ஒன்றின் குறுக்களவு 1-அடி, இன்னொன்றின் குறுக்களவு 1-அங்குலம்உடையதான வட்டமான இரண்டு வெள்ளைக் கண்ணாடி பில்லைகளைச் சேகரித்து, நிகளம் 6-அடி, ஒருபக்கவாயின் குறுக்களவு 1-அடி, மற்றொருபக்கத்துவாயின் குறுக்களவு ஒருஅங்குலம், இவ்வளவினதான வாட்டமாய் இருக்கும் ஒரு தகரக்குழலி னிருமுனைகளிலும் ஷை கண்ணாடிகளைக் குழலில் சலம் புகாதபடி லப்பத்தினால் நன்றாய்ப் பதியவைத்து உலர்ந்தபின்பு, குளம், ஆறு, தடாகம், ஏரி இவைகளின் அடியைப் பரிசோதிக்கவேண்டுமானால் குழலின் அகலமுனையைச் சலத்தில்மூழ்த்தி, சிறு கண்ணாடியின் பக்கமாய்ப் பார்ப்போமானால் ஜலத்தினடியிலிருக்கும் எல்லா வஸ்துவும் நன்றாய்த் தோன்றும். இக்கருவி மிகவும்பிரயோசனமுள்ளது. ஜலத்தில் வீழ்ந்தமிழ்ந்துவிட்ட மனிதர் மிருகம் முதலியவைகளைச் சீக்கிரம் எளிதில் கண்டுபிடிக்கலாம்.

இக்கருவியை இரவில் உபயோகிக்கும் பக்ஷத்தில் பரிசோதிக்கவேண்டிய இடத்தண்டை 5, 6 மத்தாப்புகளைக் கொளுத்த அவைகளின் ஒளிசலத்துள் பாய்ந்து குளத்தின் அடித்தரையில் நிலவெரிப்பதுபோல் பிரகாசம் வீசும். அப்பொழுது நன்றாய்ப் பரிசோதிக்கக்கூடும்.

### 30. விநோத விடுகதை.

ஒரே அளவினதான இரண்டு(Wine glass)வைன் கிளாஸ் அல்லது டம்ப்ளரைச் சேகரித்து, ஒன்றில் ஜலமும் மற்றொன்றில் ‡வேர்க்கடலை எண்ணெயும் நிரப்பி ஓர் மேசைமேல் சாக்கிரதையாய் வைத்து முதல் டம்ப்ளரிலிருக்கும் ஜலத்தை எண்ணெயிருக்கும் இரண்டாம் டம்பளரிலும் இரண்டாம் டம்பளரிலிருக்கும் எண்ணெயை முதல்டம்பளரிலும் மாற்றச்சொல்லவும். மாற்றும்போது நீராலும் எண்ணெயாலும் நிரம்பியிருக்கும் டம்ப்ளர்தவிர மற்ற யாதொரு பாத்திரமும் உபயோகிக்கக் கூடாது. எண்ணெயையாவது சலத்தையாவது ஒரு துளியுங் கீழே கொட்டக்கூடாது.

**இதைச்செய்யும்விதம்.**—டம்ப்ளரின் வாயைவிட சற்று அகலமான ஒரு மெல்லிய காகித அட்டையை ஜலமிருக்கும் டம்ப்ளர்மேல் வைத்து வலதுகை நடுவிரலால் அட்டையை டம்ப்ளரின் வாய்ப்புறத்தில் மெதுவாய் அழுத்திக்கொண்டு இடதுகையால் டம்ப்ளரைச் சடிரெனக் கவிழ்த்து வலது நடுவிரலை எடுத்துவிட அட்டையானது டம்ப்ளரில் ஒட்டிக்கொண்டதுபோல் நின்றுவிடும். ஜலம் ஒரு துளிகூட வெளியில் புறப்படாது. இதை அப்படியே பிடித்துக்கொண்டு எண்ணெயிருக்கும் டம்ப்ளரின்மேல் இரு டம்பளரின் வாய் ஓரமும் ஒரே நேராயிருக்கும் நிலையில் வைத்துப் பின்பு இரு டம்ப்ளரின் மத்தியில் ஒரு ஓரத்தில் ஒரு சிறுவழி உண்டாகும்படி மெதுவாய் அட்டையைச் சற்று இழுத்து விட்டுவிட மேல் டம்ப்ளரிலிருக்கும் ஜலம் எண்ணெயைவிட மிக கனமானதால் சிறு கம்பிபோல்எண்ணெயில்இறங்கும். எண்ணெய் ஜலத்தைவிட இலேசானதால் எண்ணெயும் ஜலத்தில் கம்பிபோல் ஏறும். இந்தக் காட்சியைக் கண்ணுற்றவர்கள் எல்லோரும் வெகு ஆச்சரியப்படுவார்கள். இச்செயல் முடிந்த பின்பு எண்ணெய்மேல் டம்ப்ளரிலும், ஜலம் கீழ்டம்ப்ளரிலு மிருக்கும். இப்பொழுது இரண்டு டம்ப்ளரின் மத்தியில் யாதொரு போக்கு வரவில்லாதபடி அட்டையை நன்றாய்த் தள்ளி அட்டையை டம்ப்ளரின் வாயில் இடதுகையால் மெல்லென அமுக்கிப் பிடித்துக்கொண்டு வலது கையால் டம்ப்ளரைப்பிடித்து மேசையின் ஓர்பக்கத்தில் நிமிர்த்தி வைத்துவிடவும். எனதருமைச் சிறுவர்காள்! இவ்விடுகதையை விடுவிக்கத் தெரிந்துகொள்வதினால் நீங்கள் அடைந்த சாஸ்திர சம்பந்தமான அறிவுக்காக களிப்பீர்களென்று நம்புகிறேன். சகல சாஸ்திர மூலங்களைக்கொண்டு இவைபோன்ற அநேக விடுகதைகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளைப் பின்னால் வரைவேன்.

(இன்னும் வரும்.) மா, நடேசன்.

* Cork.

‡ ஜலத்தில் மிதக்கக்கூடிய எந்த எண்ணெயையாவது உபயோகிக்கலாம்.

# சிறுவர்க்கானபக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

எனது சின்னஞ் சிறு நேசர்களே!

இந்தவிசை நான் உங்களுக்குச் சொல்லவேண்டியது விசேஷமாக ஒன்றுமில்லை. போனவிசைசிறுவர்க்கானபக்கத்தில் மந்திரவாதிசெய்த சூக்ஷமத்தைக்கண்டறிந்து தெரிவிக்கும் சிறுவர்க்குப் பரிசளிப்பதாகச் சொன்னது மதுரையில் விவேகசிந்தாமணி வாங்கும் ஒரு நண்பரின் பிள்ளை, சி. குப்புசாமிக்குக் கிடைப்பதாயிற்று. நம் சிறுதோழர் குப்புசாமி யென்பவர் விவேகசிந்தாமணிப் பத்திராதிபருக்கு எழுதிக் கேட்டுக்கொள்ள சென்றமுறை நான் வாக்களித்தபடி குறிப்பிட்ட பரிசுவகை மூன்றில் ஒன்று கிடைக்கப்பெறுவர். இந்த முறை உங்களுக்காக எழுதப்பட்ட கதையொன்றிருக்கிறது. அதைக்கீழே பதிப்பிக்கிறேன்; கவனமாய் வாசித்துப்பார்த்து சூதும் வாதும் எப்படி வேதனைசெய்யும் என்பதை நன்றாய் உணர்ந்தறிந்து நடவுங்கள்.

## சூதும் வாதும் வேதனை செய்யும்.

பெங்களூரில் இராமசாமி முதலியார் என்பவர் ஒருவர் வர்த்தகஞ் செய்து கொண்டிருந்தார். அவர்க்கு மாணிக்கம், உருக்குமணி என்றிரண்டு பெண்பிள்ளைகளும் கிருஷ்ணன், கோவிந்தன் என்றிரண்டு ஆண்பிள்ளைகளும் உண்டு. உருக்குமணி நால்வரில் இளையவளாய் நான்கு வயதுடையவளாய் இருந்தாள். கோவிந்தன், கிருஷ்ணன் என்னும் ஆண்பிள்ளைகள் இருவரும் சென்னபட்டணத்தில் தங்களுடைய அத்தையம்மாள் வீட்டிலிருந்து கொண்டு ஒரு கல்விச்சாலையில் படித்து வந்தார்கள். ஒருமுறை இவர்களுக்கு ஒருவாரம் விடுமுறை கிடைக்கவே, பெங்களூரிலுள்ள தங்கள் தாய்தந்தையரைப் பார்த்து வரும் பொருட்டாகப் புகைவண்டி யேறிச் சென்றார்கள். தாய்தந்தையர்களும் இவர்களைக் கண்டமாத்திரத்தில் அதிக பரிவுடனே இவர்களுக்குத் தின்பண்ட முதலியன வாங்கிக்கொடுத்து உபசரித்தார்கள். இவர்களும் அண்டையயல் வீட்டுச் சிறுவர்களுடனே விளையாடிக்கொண்டிருந்தார்கள். இப்படி ஆறுநாள் கழிந்தன. ஆறாவது நாள் சாயரக்ஷை இவர்களைப் பார்த்து இராமசாமி முதலியார் "அடா! பையல்காள்! நாளைப்பகல் பனிரண்டு மணி வண்டிக்கு நீங்கள் தயாராக இருக்க வேண்டும், திங்கட்கிழமை நீங்கள் பள்ளிக்கூடம் போகவேண்டு மல்லவா? நினைவிருக்கட்டும்" என்று சொன்னார்.

உடனே மூத்தவனாகிய, கிருஷ்ணன் "ஆமாம்" என்று சொல்லிவிட்டுக் கதவை ஒஞ்சரித்துக் கொண்டு சற்று உள்ளே சென்று மெதுவாக "இதென்ன இழவு" என்றான்.

அவன் தம்பி கோவிந்தன் "நாளைக்குத் திருவேங்கடம், நாராயணசாமி என்பவர்களோடு பந்தாடலாமென்று நினைத்திருந்தோமே, ஐயோ, பழுத்துப்போச்சே!" என்றான்.

அப்போது கிருஷ்ணன் "அடே கோவிந்தா! எல்லாரும் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்துக்குச் சரியாகக்கணக்குப்பார்த்து அனுப்பிவிடுகிறார்களா, நம்முடைய வீட்டில் தான் பெரிய இலச்சையாக இருக்கிறது" என்று சொன்னான்.

கோவிந்தன் "என்ன அண்ணா? நாளையோடே நமக்கு விடுமுறை சரியாய்ப்போகிறதே. நாளைக்குப் பன்னிரண்டு மணி வண்டிக்குப் போக தயாராக இருக்க வேண்டுமென்று இத்தனை நாளாக நாயனார் சொல்லிக்கொண்டு தானே யிருந்தார். உனக்கு நினைவில்லையா?" என்றான்.

கிருஷ்ணன் "ஆமாம், ஆனால் என்ன? இன்னும் இரண்டு மூன்று நாளைக்கு இங்கேதானே இருக்கச் சொன்னால் ஆகாதோ, முழுகிப்போச்சுதோ?" என்று சொன்னான்.

கோவிந்தன் "இன்னும் இரண்டு நாள் இங்கிருக்கும்படிகேட்பதனால் என்ன பிரயோசனம்? எப்படியானாலும் நாம் போக வேண்டியவர்கள் தானே. சற்றுமுன்னடியாகவே போய்விடலாமே" என்று சொல்ல,

கிருஷ்ணன் "போடாபோ, ஏதோ ஒரு காரணமாக நம்முடைய நாயனார் நம்மை நாளைக்கு அனுப்ப விரும்பி யிருக்கிறார். அது இன்னதென்று எனக்குத் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. அது கிடக்கட்டும்." என்று சொல்லிக்கொண்டே கதவைப்படிய மூடிவிட்டு இரகசியமாய் "அடே, நாம் இன்னொரு நாள் இங்கே இருக்க ஒரு உபாயம் பண்ணப் போகிறேன்" என்று சொன்னான்.

கோவிந்தன் "அதென்ன? எதோ சொல்லு பார்க்கலாம்."

கிருஷ்ணன்: "அடபோடா, சுண்ணும்பிலிருக்குது சூக்ஷமம், இதெல்லாம் எனக்கு ஆயிரம் அரைக்காற் பணந்தானே. பதினொன்றடித்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம் மெதுவாய் கம்மென்று போய் கடியாரத்தை நிறுத்திவிடுகிறேன். அப்புறம் நேரமாய் விட்டால், 'ஐயோ! மணிதெரியாமல் போச்சுதே' என்று சொன்னால் தகப்பனர் நம்மை என்ன செய்யப் போகிறார்." என்றான்.

கோவிந்தன்: "ஆமாம் அண்ணா. அது மெய்யாகுமா?"

கிருஷ்ணன்: "ஏன் ஆகாது? கடியாரம் போகாவிட்டால் பன்னிரண்டு அடிக்கிற வேளை நமக்கு எப்படி தெரியும்?"

கோவிந்தன்: "அதன்பேரென்ன? அது மாத்திரம் பொய்யாகாதோ? பெருமோசமா யிருக்கிறதே. நாயனாவுக்கு நாமம் போடப் பார்க்கிறாயே. கடியாரத்தின் சோலிக்குப் போவது சரியல்ல."

கிருஷ்ணன்: "போடா முட்டாள். வேறென்ன செய்கிறதாம். நான் என்ன, யாருடைய தலையை யாகிலும் வெட்டி சாய்க்கப்போகிறேனே? குடிமுழுகி விட்டாற்போலப் பேசுகிறாயே. கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசையா? நிற்கவும் ஆசை ஒன்றுஞ் செய்யவுங் கூடாதென்றால் காரியம் எப்படியாகும். கடியாரத்தில் ஆடுகிறகுண்டை அசையாமல் ஒருநாழி இரண்டுநாழி நிறுத்திவைத்தால் ஆருக்கென்ன நஷ்டம்? கடியாரத்திற்குத்தான் என்ன சேதம்? நீ அவ்வளவுயோக்கியனானால் பேசாமல் இரு. செய்ய வேண்டியதை நான் துணிந்து செய்து விடுகிறேன். எப்படியும் உனக்கு லாபந்தானே."

கோவிந்தன் தன்னாலானமட்டும் சொல்லியும் கிருஷ்ணன் அவன் சொல்லைக் கேட்கிறதாயில்லை. இப்படி பேசிக்கொண்டே இருவரும் உறங்கி விட்டார்கள்.

அன்று பாதிராத்திரியில் உருக்குமணி யென்பவளுக்கு காய்ச்சல் கண்டது. உடனே வைத்தியனை வரவழைத்துப் பார்த்தபோது அவர் "இது பிரமாதமான ஜன்னியாயிருக்கிறது. ஆயினும் பெரிதல்ல. இந்தமருந்தை அதிக ஜாக்கிரதையாக இரண்டு மணிக்கொரு முறை ஒவ்வொரு சிட்டிகைப் பிரமாணமாகக் கொடுத்து வாருங்கள். அப்படி என்னவாகிலும் அபாயமான குறிகள் தோன்றினல் ஒரு ஆளை அனுப்புங்கள்; பகல் பன்னிரண்டு மணி வரையில் வீட்டிலிருப்பேன், பயப்பட வேண்டாம்." என்று சொல்லிப் பத்தியம்பரியாரங்களையுந்தெரிவித்துப்போய்விட்டார்.

காலையில் தூங்கியெழுந்ததும் வீட்டிலுள்ள யாவரும் துக்கமாயிருக்கக்கண்ட இந்தச் சிறுவரிருவரும் தங்கள் தங்கை ஜன்னிகண்டு தவிக்கிறாள் என்றறிந்து அதிக வருத்தப்பட்டார்கள். ஒன்பது மணிக்கு அவர்களுடைய தாயார் சற்று நிம்மதியாக இருந்தார்கள். கிருஷ்ணனும் கோவிந்தனும் இதைக்கேட்ட மாத்திரத்தில் புழைக்கடைத் தோட்டத்தில் சென்று விளையாடிக் கொண்டிருந்தனர். தாயானவள் குழந்தையின் பக்கத்திலிருந்து கொண்டு இமைகொட்டாமல் பார்த்திருந்தாள்.

சற்று நேரங் கழிந்தபிறகு முதலியார் பிள்ளைகளைக்கூவி "தயாராயிருக்கிறீர்களா?" என்று கேட்டார்.

உடனே கிருஷ்ணன் "இல்லை நாயனா. இன்னும் மணியாகவில்லையே. இப்போது தான் கடியாரத்தைப்பார்த்தேன், பதினொன்றேகால் ஆயிற்று" என்று சொன்னான்.

முதலியாரும் "ஆனால் இன்னுங் கொஞ்ச நேரம் உல்லாசமாயிருங்கள். பத்திரம் மணியை மறக்கப்போகிறீர்கள்." என்றார்.

என்று சொல்லிக்கொஞ்சதூரம் போனவுடனே கிருஷ்ணன் "அந்தமட்டில் தப்பித்துக் கொண்டோம்" என்றான்.

கோவிந்தன்: "எனக்கு திக்குதிக்கென்றிருந்தது. கைகடியாரத்தை மடியிலிருந்து எடுத்துப்பார்த்திருப்பாரானல் நம்முடைய வண்டவாளம் வெளியாகியிருக்குமே."

கிருஷ்ணன் "அடபோடா, பயங்கொள்ளி! பனங்காட்டுநரி சலசலப்புக்கஞ்சுமா? கைகடியாரத்தைப் பார்த்தால் தானென்ன? பெரியகடியாரம் நின்றுபோய்விட்டதென்று தானேநினைத்துக்கொள்வார். எப்படியும் இந்நேரம் பன்னிரண்டு மணியாகியிருக்கும். இனிமேல் வண்டி வண்டிதான்."

இது இப்படி யிருக்கையில், நோயாய்க்கிடந்த குழந்தையின் பக்கத்தில் இருந்த தாயானவள் மூத்த பெண்ணாகிய மாணிக்கத்தைக்குழந்தை யண்டை உட்காரவைத்துத் தன் புருஷனிடம் ஓடோடியும் வந்து "ஐயா! குழந்தைக்குச்சுவாசம் குறைந்து வருகிறது. கை நெருப்புப் பறக்கிறது. உடனே வைத்தியருக்கு ஆளனுப்புங்கள்." என்று சொன்னாள். உடனே வீட்டுவேலைக்காரியை வைத்தியரிடம் அனுப்பினார்கள்.

உடனே கிருஷ்ணனும் கோவிந்தனும் "நாயனா? எங்களுக்குப் புறப்பட மணியாயிற்றா?" என்று கேட்டார்கள்.

அவர் மடியிலிருந்த தம் கைகடியாரத்தை எடுத்துக்கொண்டே "இந்நேரம் மணியாகியிருக்கலாம்" என்று சொல்லி கடியாரத்தைத் திறந்து பார்க்க, "அடடா! இந்நேரம் வண்டிபோயிருக்கும். பன்னிரண்டரையாய் விட்டதே" என்று சொன்னார்.

அப்போது அவர் பெண்டாட்டி "உங்களுடைய கைகடியாரம் சீக்கிரம் போகிறாப்போலிருக்கிறது. பெரிய கடியாரம் இன்னும் பன்னிரண்டு அடிக்கவில்லையே" என்றாள்.

கிருஷ்ணனும் தைரியத்துடன் "ஆமாம் இன்னும் பன்னிரண்டடிக்கவே யில்லை" என்றுசொன்னான். தாயார் போய் கடியாரத்தைப்பார்க்க கடியாரம் நின்று போய் விட்டதாகக் கண்டாள்.

அது கேட்ட முதலியார் "ஐயையோ! ஒரு பெரிய காரியார்த்தமாகப் பன்னிரண்டுமணி வண்டிக்கு ஒருவரைப்போய் கண்டுபேச உத்தேசித்திருந்தேன், என்ன செய்வேன்" என்று வருத்தப்படுகையில்,

தாயானவள் "ஐயோ! ஐயோ! வைத்தியர் இந்நேரம் வெளியே போய் விட்டிருப்பாரே. அடியம்மா ருக்மணீ! என் குழந்தாய்! என்ன செய்வேன்" என்று கையை முறித்துக்கொண்டு குழந்தையண்டை ஓடினாள்.

அதுகண்டு கிருஷ்ணன் "அம்மா! பயப்படாதே, நான் ஒரே ஓட்டமாக ஓடி வைத்தியரை இட்டுக்கொண்டு வருகிறேன்" என்று ஓடினான். கோவிந்தனும் அவன் பின்னே ஓடினான்.

இருவரும் ஒரே மூச்சாக ஓடி வைத்தியர் வீட்டுக்கதவைத்தட்டி "வைத்தியர் இருக்கிறாரா" என்று அழைத்தார்கள். உள்ளே வைத்தியர் பெண்டாட்டி "பன்னிரண்டே கால்மணிக்குப் புறப்பட்டு வெளியில் வழக்கம் போலப் போய்விட்டார்" என்று சொன்னாள். கிருஷ்ணன் "அவர் யாருடைய வீட்டுக்குப் போயிருக்கிறார் தெரியுமா அம்மா"? என்று கேட்டான்.

அந்நேர வேளையில் ஒரு சிறு பெண்ணோடு பேசிக்கொண்டிருந்த வைத்தியர் பெண்டாட்டியானவள் "முதலில் இன்னார் வீட்டுக்குப் போயிருப்பார் என்பது செம்மையாய்த் தெரியாது. இப்படி வந்துசற்றுநேரம் இருப்பாயானால் எனக்குத் தெரிந்தமட்டில் சொல்லுகிறேன்" என்றாள்.

இதைக்கேட்டதும் உகிர்ச்சுற்றின் மேல் அம்மிவிழுந்தாப் போலச் சற்றுநேரங் காத்திருந்தார்கள். அப்போது மேலே சொன்ன சிறுபெண்ணானவள் தங்கள் வீட்டிற்கு அண்டையில் வசிக்கும் ஒரு ஏழைக் கைம்பெண்ணினுடைய மகள் என்று தெரிய வந்தது.

அந்தப்பெண், வைத்தியர் பெண்டாட்டியை "ஆனால் அந்த வேலை எனக்குக் கிடைக்கும் என்ற எண்ணமில்லையா? அம்மணீ!" என்றாள்.

வைத்தியர் பெண்டாட்டி "ஐயோ பாவம் உன்னைப்பார்த்தால் பரிதாபமாயிருக்கிறது. என்ன செய்வேன். நீ சொன்னது போல் சரியாகப் பன்னிரண்டு மணிக்கு வந்திருந்தால் அந்த வேலை உனக்கே கிடைத்திருக்கும். உனக்காக நான் வெகுதூரம் பரிவாகப்பேசினேன். பன்னிரண்டே கால் மணிவரையிலுங்கூடப் பார்த்தோம். அப்படி காத்துக்கொண்டிருக்கும்போது இன்னொருவர் வரவே அவரைப்பேசி அந்த வேலையில் வைத்தாய் விட்டது. சொன்னது சொன்னபடியே அந்தந்த வேளைக்கு அந்தந்த வேலையைச் செய்யாதவர்கள் எனக்குச் சரிப்படுவ தில்லை. நீ யேன் அந்த வேளைக்கு வராமற் போனாய்?" என்று கேட்டாள்.

அதற்கு அந்தப்பெண் "அம்மா! நான் முன்னதாகவே வந்தேன். வரும்போது இராமசாமி முதலியார் வீட்டண்டையில் மணியென்னவென்று கேட்டேன். அங்கிருந்த ஆள் கடியாரம் பார்த்துப்பதினொன்றேகாலாயிற்று என்று சொன்னான். அதன்மேல் நான் சரியான வேளைக்குப் போகலாமென்று முன்னும் பின்னுமாகக் கொஞ்சநேரம் உலாவிக்கொண்டிருந்து வந்தேன். ஐயோ! அரைமணி நேரத்திற்கு மேலே ஆய் விட்டதென்றும் அதனால் எனக்குக்கிடைக்கக்கூடிய வேலையை இழக்கலாயிற்றே என்றும் காண என்மனம் துடிக்கின்றது. ஐயோ! என் தாய் இதைக்கேட்டால் கனவருத்தமடைவாளே! என்ன செய்வேன்" என்று சோகித்தாள்.

வைத்தியன் பெண்டாட்டி "இது உன்னால் வந்த தப்பிதமுமல்ல; நல்லது, அந்தப் பிள்ளைகள் காத்துக்கொண்டிருக்கிறார்கள்" என்று சொல்லி அவர்களை நோக்கி வந்தாள்.

அப்போதுகிருஷ்ணன் "ஐயோ! கோவிந்தா, உன் பேச்சைக்கேளாமற் போனேனே. நான் செய்த தந்திரத்தினால் எத்தனை துன்பம் உண்டாயிற்று பார்த்தாயா. இப்படி இந்தப் பன்னிரண்டுமணியை இத்தனை காரியம் பற்றிக்கொண்டிருப்பதுண்டா," என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

வைத்தியன் பெண்டாட்டியும் மூவர் நால்வருடைய பேரைச்சொல்லி அவர்களுடைய வீட்டிற்குப்போய் வைத்தியரைக் கண்டுபிடிக்கலாம் என்று சொன்னாள், அவர்களும் அது

கேட்டதும் தாமதிக்காமல் அங்கங்கே அலைந்து திரிந்து அலுத்து, அதிவேகமாக விட்டுமுகமாய் வருகிற வைத்தியரைக்கண்டு வண்டியை நிறுத்தி, சங்கதியைச் சொல்லி வைத்தியரை இட்டுக்கொண்டு போனார்கள்.

வைத்தியரும் குழந்தையை நாடி பிடித்துப் பார்த்துவிட்டு, வெளியேவந்து "ஐயோ பாவம்! சிறு குழந்தை, மிஞ்சிப்போய் விட்டது. இனி மனுஷப்பிரயத்தனத்தாலாவது ஒன்று மில்லை. கெட்ட குறிகள் தொடங்கிவிட்டன. நோய்க்கு மருந்து; விதிக்கு மருந்தேது"! என்று சொல்லிப் போய்விட்டார்.

அன்றிரவெல்லாம் கிருஷ்ணனுக்குத் தூக்கம் பிடிக்கவேயில்லை. அவன் எண்ணமென்னமோ சித்தியாயிற்று. இரண்டொரு நாள் பள்ளிக்கூடம் போகத் தடை உண்டாயிற்று. மெய்தான். அதனாலுண்டான நஷ்டம் எவ்வளவு. கடியாரம் டிக் டிக் என்று அடிக்கும் ஒவ்வொரு சப்தமும் அவன் இருதயத்தைத் துடிக்கச்செய்தது. அதைப்பொறுக்கமாட்டாமல் கதவைத் திறந்து வெளியே போய் அவன் தங்கையைப் படுக்கவைத்திருந்த அறைக்கு வெளியே ஒரு தூணின்மேல் சார்ந்து கொண்டு அவ்வறையின் கதவினுடைய துவாரங்களில் தெரியும் விளக்கொளியைப்பார்த்துக் கொண்டிருந்தான்.

இவனைப் பழிக்கின்றதாய்த் தோற்றும் கடியாரந்தவிர அந்த வீட்டில் வேறொன்றின் சப்தமும் கேட்கவில்லை. அதன் சப்தமானது சர்வாந்தரியாமியாகிய சர்வேஸ்வரன் தவிர வேறெவருடைய கண்ணோக்கமும் செல்லாத சமயத்தில், தான் அந்த கடியாரத்தின் குண்டை நிறுத்தின சங்கதியை அந்த கடியாரம் எல்லாருமறிய உரக்கச்சொல்வதான பாவமாகத் தோன்றிற்று. இப்படியாகத்தன் தகப்பனை மோசம் பண்ணத்தலைப்பட்டு இத்தனை பேர்க்குஇத்தனை துக்கத்தையும் துன்பத்தையும் தருவித்தான்.

"இந்த அறையில் எல்லாரும் நிச்சப்தமாயிருக்கிறார்களே. ஒருவேளை குழந்தை தூங்குகிறதோ" என்று பாவில் குழல்போல மனந்தடுமாறிக்கொண்டு அந்த அறையின் கதவைப்பார்த்தவண்ணமாக நின்றுகொண்டிருந்தான். மணியும் அடித்து அடங்கிவிட்டது. ஒரு சப்தமுமில்லை. எங்கே பார்த்தாலும் சில்லென்றிருந்தது. கொஞ்சநேரத்துக்கெல்லாம் கதவைத் திறந்துகொண்டு தகப்பனார் வெளியில் வந்தார்.

உடனே கிருஷ்ணன் மெல்லென எதிர்சென்று "நாயனா! தங்கை எப்படி இருக்கிறாள்?" என்று கேட்டான்.

தகப்பனார் "நன்றாய் இருக்கிறாள். ஆனால் அவள் இங்கில்லை. சரியாய்ப் பன்னிரண்டுமணிக்கு ஆத்துமா பிரிந்துபோய் விட்டது." என்று சொன்னார்.

கிருஷ்ணனும் ஒரு க்ஷண நேரம் நிதானித்து "ஐயோ! நாயனா, ஐயோ! நானே அவளுக்குச் சத்துராதியாக இருந்தேன். நானே அவளைக் கொன்றேன்" என்று விம்மியழுது நடந்த யாவற்றையும் நடந்தபடியே சொல்லிவிட்டான்.

அவனுடைய துக்கத்தையும் மனவேதனையையும் பார்க்கப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவனுடைய தாய்தந்தையர் தங்களாலானமட்டும் அவனைத் தேற்றினார்கள். அந்த மனக்கிலேசம் அவனுக்குக் கொஞ்சத்தில் தெளியவில்லை. அப்புறம் நெடுங்காலஞ் சீவித்திருந்தானேனும் பனிரண்டடிக்கிறதைக் கேட்கும்போதெல்லாம் அவனுக்குப்பகீரென்றிருக்கும்.

சூதும்வாதும் ______ இப்படித்தான் வேதனை செய்யும்.

## அறிவைப் பரவச்செய்யும் சபை உபகாரசங்கம்.

அறிவைப் பரவச்செய்யும் சபை (ஏஜன்ஸி) க்கு உபகாரிகளாக ஏற்பட்டவர்கள் அங்கங்கே வேலைசெய்து வருகிறார்கள். சென்றமீ நமது சபை மெம்பர் ஒருவர் மதுரைக்குச்சென்று அங்கே நமது சபையின் நோக்கங்களைத் தெரியப்படுத்த உழைத்ததால் அங்குள்ள கனதனவான்கள் உத்தியோகஸ்தர்களெல்லாம் விவேகசிந்தாமணியை ஆதரிப்பவர்களாயிருக்கிறார்கள். இரங்கூனிலும் நமது சபை உபகாரிகள் விடாமுயற்சியெடுத்துழைத்து வருகிறார்கள். விவேகசிந்தாமணியைப் பலப்படுத்தவேண்டிய காரியம் இன்னும் முக்கியமாக விருப்பதால் அறிவைப் பரவச்செய்யும் சபை உபகார சங்கத்தார் செய்யும் வேலைகளை ஒழுங்குபட மேன்பார்வை செய்து நடத்திவர அசந்தர்ப்பமாகவிருக்கிறது. நமது சபை உபகாரிகளாக விருக்க இசைந்தவர்களெல்லாரும் விவேகசிந்தாமணியைப் பரவச்செய்யும் வேலையில் மும்முரமாக ஏற்பட்டுழைத்து வருவார்களென்று கோருகிறோம். விவேகசிந்தாமணிக்கு அடுத்தமாசமுடிவோடு முதல் வருஷம் நிறைந்து இரண்டாவது வருஷந் தொடங்கப்போவதால் இச்சமயம் நமது நண்பர்களும் உபகாரிகளும் அதிக சிரத்தையெடுத்துழைத்து வருவார்களென்று கோருகிறோம். எடப்பள்ளி, கல்வாய் முதலிய இடங்களில் உழைக்கும் உபகாரிகள் அனுப்பிய ரிபோர்ட்டுகளைப் பார்த்துக்களித்

தோம். இந்த மாசம் 6வ திருவாநந்தபுரத்தில் நமது சபை உபகாரியாக விருந்து விவேகசிந்தாமணியை அங்கு பரவச்செய்துழைத்துவந்த ஹைகோர்ட் வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ எஸ். சேஷய்யங்கார் அவர்கள் காலஞ்சென்றதை யறிந்து குறிப்பிட மிக விசனிக்கிறோம். அவர் வயதில் 75-க்கு மேற்பட்டவராயினும் நமது சபை விஷயத்தில் அதிக உண்மையோடும் ஊக்கத்தோடும் தளரா முயற்சியாக வுழைத்துவந்த உத்தமர். அவர் இறந்தது நமது சபைக்கு உண்மையில் பெரிய நஷ்டமே. அங்கேயுள்ள நமது இதர நண்பர்கள் அவருடைய ஸ்தானத்தை வகித்து நமது சபை முன்னுக்கு வர வுழைப்பதில் பின்னடையார்களென்று நம்புகிறோம். நூதனமாய்ச் சேரும் உபகாரிகள் அவர்கள் செய்யவேண்டியதென்னவென்று கேட்கிறார்கள். அறிவைப் பரவச் செய்யும் சபை உபகாரிகளின் கடமைகளைக் குறித்து முதலில் விண்ணப்பத்திலும், பிறகு முதல் சஞ்சிகையின் கடைசிப் பக்கத்திலும் வரைந்திருப்பதை இவர்கள் தயவு செய்து கவனிப்பார்களென்று கோருகிறோம். நமது சபையின்நோக்கங்களையும் அவைகளை நிறைவேற்றும் வழிவகைகளையும் சுருக்கமாகப் பகுத்து அட்டையின் இரண்டாவது பக்கத்தில் அச்சிட் டிருக்கிறோம்: நூதனமாய்ச் சேரும் உபகாரிகள் முதல்முதல் நமது பத்திரிகையைப் பரவச்செய்ய வழிதேடுவதோடு மற்றப்படியும் அவர்களா லிசைந்தமட்டும் நமது சபையின் நோக்கங்களை நிறைவேற்ற உதவிபுரிந்து உபகரிப்பார்களென்று கோருகிறோம்.

## விசேஷக்குறிப்புகள்.

**நமதுபத்திரிகை.** இந்தமுறைவிஷயங்கள் நாம் குறித்த 32-பக்கத்துக்குள் அடங்காமல் அதிகரித்துவிட்டபடியால் கூட 8-பக்கம் சேர்த்து இந்த சஞ்சிகை மாத்திரம் 40-பக்கம் கொண்டதாகச் செய்திருக்கிறோம். அடுத்தமாசத்தோடு முதல்வருஷம் முடிந்துபோகிறபடியால் இந்த வருஷத்துக்குப்பாக்கி செலுத்தவேண்டி யிருப்பவர்கள் உடனே பாக்கியை அனுப்புவதோடு அடுத்த வருஷத்திற்கும் முன்னதாகவே சந்தாதொகையையனுப்பக்கோருகிறோம். இனிமுன்பணம் கட்டுகிறவர்களுக்கு மட்டுமே வருஷத்துக்கு மூன்று ரூபாயாகிய குறைந்த சந்தாப்படி பத்திரிகை யனுப்பப்படும். முதல் மூன்றுமாசத்திற்குள் சந்தா தொகையை யனுப்பத்தவறுகிறவர்கள் வருஷத்துக்கு 4-ரூபாய் விகிதம் கட்டவேண்டும். நமது வாசிகையொப்பக்காரர்களெல்லாரும் இவ்விதியை வாசித்து மனதில் வைத்து நடக்கக் கோரப்படுகிறார்கள்.

---

**பெங்கால்ஜூரி கமிஷன்** பெங்கால் உதவிக் கவர்னர் ஜூரிவிசாரணை யேற்பாட்டைப்பற்றிச் செய்த உத்திரவைக் குறித்துண்டான அமளிகுமளியில் இந்தியா மந்திரியவர்கள் உத்திரவு செய்தபடி ஜூரிவிசாரணை யேற்பாட்டைப்பற்றி விசாரித்து ரிபோர்ட்டுசெய்ய நியமிக்கப்பட்ட கமிஷன் சபையார் அவர்கள் ரிபோர்ட்டை யெழுதிமுடித்து கவர்ன்மெண்டுக்கனுப்பிவிட்டார்கள். அச்சபைமெம்பர்கள் எல்லாரும் சேர்ந்து சிபார்சு செய்ததின்மேல் இந்தியா கவர்ன்மெண்டார், இந்தியாமந்திரியவர்களுக்கு அதுவிஷயத்தைப்பற்றித் தெரியப்படுத்தியபின் பெங்கால் உதவிக் கவர்னர் அவர்கள் செய்த உத்திரவை அனுஷ்டானத்தி லில்லாதபடி எடுத்துவிட்டார்களென்று தெரியவருகிறது.

**ஹைகோர்ட்டு** கனம் மிஸ்டர் ஜஸ்டிஸ் பார்கர் ராஜாவின்பேரில் சீமைக்குப் போயிருக்கிறார். அவருடைய ஸ்தானத்தில் தஞ்சை டிஸ்திரிக்ட்டு ஜட்ஜாயிருந்த மிஸ்டர் ஜெ. எ. டேவிஸ் ஹைகோர்ட்டு ஜட்ஜாக ஆக்டிங் வேலை பார்த்து வருகிறார். ஹாண்ட்லி அவர்கள் வேலையைவிட்டு நீங்கிப் பென்ஷன் பெற்றுக்கொண்டு சீமைக்குப் போய்விட்டார்.

---

**இராஜதானிஸிவில் ஸேர்விஸ்.** இவ்விராஜதானி ஸிவில் ஸெர்விஸில் மூன்று டிப்டி கலெக்டர் வேலைகளுக்கு நியமனம்செய்ய வருகிற எப்பிரல்மீ முதலில் பி. ஏ. முதல் வகுப்பில் தேறினவர்கள் எம். ஏ. முதலிய உயர்ந்த பட்டம் பெற்றவர்கள் இவர்களில் 25-வயதுக்குட்பட்டவர்கள் போட்டிபோடும் படியான பரீக்ஷை யொன்று நடத்தப்படும். அதில் முதலாகத் தேறியமூவர்க்கும் 250-ரூபாய் சம்பளத்தில் 5-வது கிரேடு டிப்டி கலெக்டர் வேலை கொடுக்கப்படும்.

---

**சென்னை யூனிவர்ஸிடி.** 'சென்னை யூனிவர்ஸிடி' என்னும்கல்விச்சங்கத்துஸெனேட் சபைக்கு அச்சங்கத்தார் அளிக்கும் வித்தியா பட்டங்கள் கிடைக்கப் பெற்றவர்கள் சேர்ந்து 2-மெம்பர்களை நியமிக்க கவர்ன்மெண்டார் சில விதிகளும் நிபந்தனைகளும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். 20-வருஷங்களுக்கு முன் பி. ஏ., பி. ஸி. இ. பட்டம் பெற்றவர்களும் எம். ஏ. முதலான உயர்ந்த வித்தியா பட்டங்கள் பெற்றவர்களும் சேர்ந்துயூனிவர்ஸிடி ஸெனேட்சபைக்கு வருஷத்திற்கு இரண்டு மெம்பர்கள் தெரிந்தெடுத்து நியமிக்கச் சுதந்தரம்கொடுத்திருக்கிறார்கள்.

சட்டநிருபணசபை சீர்த்திருத்தம்

இந்தியாவிலுள்ள சட்டநிருபண சபைகளைச் சீர்திருத்துவதற்காக சென்ற வருஷம் பார்லிமெந்து சபையார் சட்டமாகப் பாஸ்செய்த இந்தியன் கௌன்ஸில்ஸ் ஆக்ட்டுப்படி இந்தியா கவர்ன்மெண்டார் செய்து பிரசுரிக்கவேண்டிய விதிகளெல்லாம் பிரசுரமாய் விட்டன. சட்டநிருபண சபையில் மெம்பர்கள் கேள்விகள் கேட்பதற்கும், வருஷாந்த வரவு செலவு திட்டக்கணக்குவிவரங்களைப்பற்றி தர்க்கித்துப் பேசவும்இந்தியா கவர்ன்மெண்டாரால்செய்து,இந்தியா மந்திரியவர்களால்அங்கீகரிக்கப்பட்ட விதிகள் போனமாசமே வெளியாய் விட்டன வென்று சொன்னோம். அவைகளைக்கீழேபிரசுரித்துஅவற்றின்பின் சென்னைசட்டநிருபண சபைக்குமெம்பர்கள் நியமன விஷயமாய் இந்தியாமந்திரியவர்கள் அங்கீகாரம் பெற்று வந்து இந்தியா கவர்ன்மெண்டாரால் பிரசுரிக்கப்பட்ட விதிகளையும் பிரசுரிக்கிறோம். சென்னை சட்டநிருபணசபைக்குகவர்னர், முக்கியசேனாதிபதி, 2-கௌன்ஸில் மெம்பர்கள், அட்வோகேட் ஜெனரல் ஆகிய ஐவரும் அவர்களுத்தியோக முறையில் மெம்பர்களாகவிருப்பதோடுஇன்னும் 20-மெம்பர்கள் அதிகமாய் நியமிக்கப்படுவோர்கள். இவர்களை நியமிக்கும் முறையைப்பற்றிச் செய்யப்பட்டிருக்கும் விதிகளைப் பின்னால் காணலாம்.

---

## சென்னை சட்ட நிருபண சபை விதிகள்.

---

**I. அரசிறை வரவு செலவு திட்டக்கணக்குகளைக் குறித்துத் தர்க்கித்துப்பேசுவதற்கான விதிகள்-4.**

அதில் முதலாவது விதிப்படி அந்தந்த வருஷத்து அரசிறை வரவு செலவு கணக்குகள் சட்டநிருபண சபையில் விளங்க எடுத்துரைக்கப் படுவதுடன் ஒவ்வொரு மெம்பருக்கும் அக்கணக்குகளின் அச்சிட்ட காபி ஒன்று கொடுக்கப்படும்.

2. கணக்குகள் விளங்க வெடுத்துக் கூறப்பட்டபின் சட்டநிருபண சபையிலுள்ள ஒவ்வொரு மெம்பரும் அக்கணக்கு விவரங்களைக் குறித்துத் தனக்குத் தோன்றும் அபிப்பிராயங்களைத் தெரிவித்துப் பேசலாம்.

3. எல்லாமெம்பர்களும் பேசியானபின் முதலில் அரசிறை கணக்கை விளங்க வெடுத்துக்கூறிய மெம்பர் அவர்களுக்கெல்லாம் பதிலுரைத்து மறுபடியும் பேசச் சுதந்தரமுடையவரா யிருப்பார். அவர் பதிலுரைத்துப் பேசியபின் ப்ரெஸிடெண்டவர்கள் தமக்கு அவசியமாகத் தோன்றும் அபிப்பிராயங்களைத் தெரிவித்து தர்க்கத்தை முடித்துவிடுவார்.

4. சட்டநிருபண சபை மெம்பர்கள் தர்க்கம் செய்து பேசுவதில் இவ்விராஜதானி கவர்ன்மெண்டாரின் நேரான மேல்விசாரணையிலிருக்கும் அம்சங்களைத் தவிர மற்றவைகளைக் குறித்து ஒன்றும் பேசக்கூடாது.

**II. சபையில் கேள்விகள் கேட்பதைக்குறித்து 10 - விதிவிலக்குக ளேற்படுத்தி யிருக்கிறார்கள்.**

இவற்றில் முதலாவதுவிதிப்படி இராஜதானி சட்டநிருபணசபை மீட்டிங்கில் இவ்விராஜதானி கவர்ன்மெண்டாருடைய நேரான மேல் விசாரணையிலிருக்கும் துறைத்தன விஷயங்களைத் தவிர இதரவிஷயங்கள் இலாகாக்கள் சம்மதமாக யாதொரு கேள்விகளும் கேட்கக்கூடாது. இராஜதானி கவர்ன்மெண்டாருக்கும், கவர்னர்-ஜெனரலுக்கும், அல்லது இந்தியா மந்திரிக்கும் விவாதத்திலிருக்கும் எந்த விஷயத்தைப்பற்றியும் யாதொரு கேள்வியும் கேட்கக்கூடாது.

2-வது விதிப்படி மேலே குறித்த விலக்குகளுக்குள்பட்டும் கீழே வரையப்படும் கட்டுப்பாடுகளுக்குள்பட்டும் மெம்பர்களில் யார் என்னகேள்விகள் கேட்டாலும் கேட்கலாம்.

3-வது ஒரு கேள்வி கேட்க விரும்பும் மெம்பர் அக்கேள்வி கேட்குமுன் சட்டநிருபண சபை காரியதரிசிக்கு பூர்த்தியாக ஆறுநாள் நோட்டீஸ்கொடுத்து அக்கேள்வியையும் பூர்ணமாகஎழுதி அவருக்கனுப்ப வேண்டும்.

4. கேள்விகள் கேட்பதில் அவை சங்கதி தெரிந்துகொள்ளக் கேட்கும் கேள்விளாகமட்டு மிருக்க வேண்டும்; ஒரு சங்கதியைப்பற்றி விவாதித்தாவது, அனுமானித்தாவது யாதொரு கேள்வியும் கேட்கக்கூடாது.

5. ப்ரெஸிடெண்டவர்கள் அவருக்கு இஷ்டமானால் யாதொரு முகாந்திரமும் சொல்லாமல் ஒரு கேள்வி கேட்பது அவருடைய அபிப்பிராயத்தில் பொதுநலத்திற்கு விரோதமானதா யிருக்குமென்று மட்டும் சொல்லிவிட்டு அக்கேள்வியைக் கேட்க விடாமல் தடுத்துவிடலாம்; அப்படி தடுத்துவிடப்பட்ட கேள்விகள் சட்டநிருபண சபை நடவடிக்கைகளில் பதியப்படமாட்டா.

6. ப்ரெஸிடெண்டவர்களுக்குத் தகுதியாகத் தோன்றினால் ஒரு கேள்வியை 6-நாளைக்குக் குறைந்த நோட்டீஸ் கொடுத்துக் கேட்க அனுமதி கொடுக்கலாம்; எந்தக்கேஸிலாவது குறித்த 6-நாளைக்கு மேற்பட்ட காலநோட்டீஸ் கொடுக்க வேண்டுமென்று சொல்லலாம்; அல்லது, கேட்க அனுமதிகொடுக்கப்பட்ட கேள்வியொன்றிற்குப் பதிலுரைக்க முன்குறித்த கால அளவைவிட அதிகப்பட்ட காலசாவகாசம் கொடுக்கலாம்.

7. ப்ரெஸிடெண்டு சாரியதரிசிக் கனுப்பப்பட்ட கேள்வியைக் கேட்க அனுமதி கொடுத்தபின் அக் கேள்வி சட்டநிரூபண சபையின் நோட்டீஸ் பேபரில் அச்சிடப்படும். அந்த நோட்டீஸில் பதியப்பட்ட கேள்விகளெல்லாம் சபை மீட்டிங்கு கூடியதும், மற்ற விஷயங்கள் எதையும்பற்றி யோசிக்குமுன், நோட்டீஸ் பேபரிலுள்ள வரிசைக் கிரமப்படி கேட்கப்படவேண்டும்.

8. ஒரு கேள்வியை அதை வரைந்தனுப்பியவராலாவது அவரில்லாவிட்டால் அவருக்காக வேறொரு மெம்பராலாவது சபையில் வாசிக்கப்படவேண்டும். அதற்கு ப்ரெஸிடெண்டு தாமேயோ அல்லது தாம் அதற்காக நியமிக்கும் வேறொரு மெம்பனைக் கொண்டோ பதிலுரைப்பார்.

9. நோட்டீஸ் பேபரில் பதியப்பட்ட கேள்வி யொன்று சபைகூடிய காலத்தில் ஒருவராலும் கேட்கப்படாவிட்டாலும், ப்ரெஸிடெண்டவர்களுக்கு யுக்தமாகத் தோன்றினல் பொதுநலார்த்தம் அக் கேள்விக்குப் பதிலுரைக்கும்படி உத்தரவு செய்யலாம்.

10. இவ்விதிகளின்படி கேட்கப்படும் கேள்விகளுக்குக் கொடுக்கும் மறுமொழிகளின்மேல் யாதொரு விதத்திலும் தர்க்கம்செய்து பிரஸ்தாபிக்க இடங் கொடுக்கப்பட மாட்டாது.

---

## III. மெம்பர்கள் நியமனம் செய்வதற்கான விதிகள்.

---

சென்னையிலும் மற்ற இராஜதானிகளிலுமுள்ளசட்ட நிரூபணசபைகளுக்கு மெம்பர்கள்நியமனம் செய்யும் விதிகள் இந்தியா கவர்ன்மெண்டாரால் சென்ற வாரத்து "இந்தியா கெஜட்"டில் பிரசுரஞ் செய்யப்பட்டிருக்கிறது. பழைய சட்டப்படி சென்னைசட்ட நிரூபணச்சபையில் அதிகப்படி மெம்பர்களின்தொகை அட்வொகேட்-ஜெனரலைச் சேர்த்து ௲-க்கு மேற்படாமலும் ௫-க்குக் குறையாமலு மிருக்கவேண்டியதென்று நிர்ணயிக்கப்பட்டிருந்தது. புதிய இந்தியன் கௌன்ஸில்ஸ் ஆக்ட்டுப்படி இச்சபையின் அதிகப்படி மெம்பர்களின் தொகை ௲-க்குக் குறையாமலும் உ௲-க்கு மேற்படாமலு மிருக்கவேண்டிய தென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்நிபந்தனையை யனுசரித்து இச்சபையின் அதிகப்படி மெம்பர்கள் தொகை உ௲-ஆகச் செய்யப்படும். இம்மெம்பர்களை நியமனம் செய்யும் விஷயமாய்இந்தியாகவர்ன்மெண்டார் தயார்செய்து இந்தியாமந்திரியவர்களால் அங்கீகரிக்கப்பட்டுவந்தபின் "இந்தியா கெஜட்"டில் பிரசுரிக்கப்பட் டிருக்கும் விதிகளின் சாராம்சத்தைக் கீழே பிரசுரிக்கிறோம்:—

(1) அட்வோகேட்-ஜெனரலைத்தவிர மற்றப்படி நியமிக்கப்படும் அதிகப்படி மெம்பர்களில் ௲-க்கு மேற்படடவர்கள் உத்தியோகஸ்தர்களாக இருக்கக்கூடாது.

(2) அதிகப்படி மெம்பர் ஸ்தானங்களில் 7-ஸ்தானங்களுக்கு நியமனம் செய்வதில் கவர்ன்மெண்டார் பின்வரும் சபைகள் அல்லது சங்கத்தார்களின் சிபார்சை யனுசரித்து நியமனம் செய்தல் வேண்டும்:—

(க) சென்னை நகர் முனிசிபாலிடி.

(உ) சென்னை நகர் முனிசிபாலிடியைத் தவிர மற்ற முனிசிபாலிடிகள் தனியாகவாவது, ஒரு கும்பல், அல்லது கும்பல்களாகச் சேர்ந்தாவது சிபார்சு செய்யும்படி கவர்ன்மெண்டார் இதற்காகத் தெரிந்தெடுத்து விளம்பரம் செய்யும் முனிசிபாலிடிகள்.

(௩) மேலே சொன்னபடி டிஸ்திரிக்ட் லோகல் போர்டுகளில் தனியாகவாவது, கும்பல் அல்லது கும்பல்களாகச் சேர்ந்தாவது சிபார்சு செய்யும்படி தெரிந்தெடுத்துப் பிரசுரிக்கப்பட்ட லோகல் போர்டுகள்.

(ச) வியாபாரிகள், வர்த்தகர், தொழிலாளிகள் சேர்ந்த சங்கம் அல்லது சங்கங்களில் கௌன்ஸிலுக்கு மெம்பர் சிபார்சு செய்யத் தக்கவையாகக் கனம் பொருந்திய கவர்னர் அவர்களால் தெரிந்தெடுத்துப் பிரசுரிக்கப்பட்டவை.

(ரு) சென்னை யூனிவர்ஸிடி செனேட் சபை.

நிபந்தனை.—மேலேகண்ட சங்கங்களில் (க), (உ), (௩), (ச), (ரு), குறிக்கப்பட்டவர்கள் (பின்வரும் ௭-வது விதியில் கண்டபடிக்கன்றி மற்றப்படி) குறைந்தது ஒரு மெம்பராவது அவர்கள் சிபார்சின்பேரில் நியமிக்கப்படப் பாத்தியமுள்ளவர்களா யிருப்பார்கள். (க), (ச), (ரு)-ல் குறித்த சங்கங்கள் அவர்களுக்குப் பிரதிநிதியாக ஓரே ஒருவர்தான் சிபார்சு செய்யப் பாத்தியமுள்ளவர்க ளாவார்கள்.

(3.) உத்தியோகஸ்தர்களால் நிரப்பப்படாத பாக்கியிருக்கும் ஸ்தானங்களுக்கு கனம்பொருந்திய கவர்னர் அவர் யுக்தப்படிசிறுபான்மையர்களாய்த் தக்க பிரதிநிதியின்றி யிருக்கும் சமூகத்தார், வகுப்பார்களுக்குப் பிரதிநிதிகளாக விருக்கத் தக்கவர்களைக் கொண்டு தாமே நிரப்பிவிடலாம், ஆனல் இப்படி பாக்கியுள்ள ஸ்தானங்களில் ஒன்று மட்டும் சாதாரணமாய் கவர்ன்மெண்டுக்கு வருஷத்தில் உ0,000-ரூபாய்க்குக் குறையாமல் பேஷ்கஷ் கட்டும் நிலசுவான்களில் ஒருவரால் நிரப்பப்பட்டு வரவேண்டும்.

(4.) சட்ட நிரூபணசபையில் மெம்பர் ஸ்தான மொன்று காலிவிழுந்து அது உ-வது விதியிற் கண்டபடி நிரப்பப்பட வேண்டியதாக விருந்தால் கனம் பொருந்திய கவர்னர், அந்த ஸ்தானத்திற்கு மெம்பர் நியமனம் செய்யத்தக்கவரைப் பொறுக்கிச் சிபார்சு செய்ய தகுதியுள்ள சங்கம் அல்லது சங்கங்களுக்குத் தெரிவித்து அந்த ஸ்தானத்துக்குத் தக்க ஒருவரைப் பொறுக்கிச் சிபார்சு செய்யும்படி கேட்கச் செய்யவேண்டும்,

(5.) மெம்பர் ஸ்தானத்திற்குச் சிபார்சு செய்யும் விதங்கள்:—

(a) முனிசிபாலிடி, டிஸ்திரிக்ட் போர்டு, அல்லது ஸெனேட் சபைகளினால் அவ்வச்சங்கத்தின் மெம்பர்களில் பெரும்பான்மையோர் அபிப்பிராயப்படி தெரிந் தெடுக்கப்பட்டவர் சிபார்சு செய்யப்படத் தக்கவராவர்.

(b) சட்டப்படி நியமிக்கப்படாத சங்கங்கள் அவர்கள் சங்கத்தின் ஆலோசனைக்கு வந்த விஷயங்களைத் தீர்மானிப்பதற்காகவுள்ள அவர் சங்கவிதிகளின் முறைப்படி தெரிந்தெடுத்துத் தீர்மானிக்கபட்டவர் சிபார்சு செய்யப்படுவார்கள்.

(c) முனிசிபாலிடிகள், அல்லது டிஸ்திரிக்ட் போர்டுகள், அல்லது வேறு சங்கங்கள் கும்பலாகச் சேர்ந்து சிபார்சு செயயவேண்டுமானால் கனம் பொருந்திய கவர்னர் நிர்ணயிக்கும் பிரமாணத்தின்படி, அந்த முனிசிபாலிடி அல்லது, லோகல் போர்டு அல்லது, சங்கத்தார் தெரிந்தெடுத்து நியமிக்கும் பிரதிநிதிகள் பெரும் பான்மையோர் அபிப்பிராயப்படி சட்ட நிரூபண சபை மெம்பர் ஸ்தானத்திற்கு நியமிக்கப்படத் தக்கவர் தெரிந்தெடுத்து சிபார்சு செய்யப்படுவார்.

(6.) ஒரு முனிசிபாலிடி அல்லது பலமுனிசிபாலிடிகள் சேர்ந்து மெம்பர்களை சிபார்சு செய்வதில் அப்படி சிபார்சு செய்யப்படுகிறவர் அந்த முனிசிபாலிடிகளில் ஒன்றின் எல்லைக்குள் சாதாரணமாய் வசிப்பவராக விருக்கவேண்டியது கட்டாயம். இப்படியே டிஸ்திரிக்ட் போர்டுகளால் சிபார்சு செய்யப்படுபவர்கள் அந்த போர்டுகளின் எல்லைக்குள் வசிப்பவராக விருக்கவேண்டியது கட்டாயம்.

(7.) காலியாயிருக்கும் மெம்பர் ஸ்தானத்துக்கு ஒருவரைத் தெரிந்தெடுத்துச் சிபார்சு செய்யக் கேட்டுக்கொள்ளப்பட்ட இரண்டுமாசத்திற்குள், அப்படி கேட்டுக்கொள்ளப்பட்ட சபை யல்லது சங்கத்தார் தக்க ஒருவரைத் தெரிந்தெடுத்துச் சிபார்சுசெய்யத் தவறினால் கனம் பொருந்திய கவர்னர் எந்தவகுப்பு அல்லது ஜனசமூகத்திற்கு பிரதிநிதியாக மதிக்கப்படுகிறதோ அந்த வகுப்பு அல்லது ஜனசமூகத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவரைத் தன்னிஷ்டம் போல் நியமனம் செய்யலாம்.

(8.) மெம்பர் ஸ்தானத்திற்குச் சிபார்சு செய்யப்பட்ட ஒருவரை கனம் பொருந்திய கவர்னர் நியமனம் செய்ய மறுத்தால் மறுபடியும் ஒருவரைச் சிபார்சு செய்யும்படி கேட்டுக்கொள்ளப் படுவார்கள். அதன்மேல் ரு, எ-வது விதிகளிற் கண்டபடி நடந்து கொள்ள வேண்டியது.

(9.) (ஏ) இவ்விதிகள் ஊர்ஜிதத்திற்கு வந்தவுடனே கூடிய சீக்கிரத்தில் உத்தியோகஸ்த ரல்லாதவர்களுக்குரிய எ-மெம்பர் ஸ்தானங்கள் உ-வது விதியிற்கண்ட விவரப்படி சிபார்சு செய்யப்பட்டவர்களால் நிரப்பப்படவேண்டும்.

(பி) உடனே எ-மெம்பர் ஸ்தானங்கள் காலியில்லாவிட்டால் அப்போதப்போது காலியாகும் ஸ்தானங்களை உ-வது விதியிலுள்ள நிபந்தனைக்குள்பட்டு கனம் பொருந்திய கவர்னர் அவர்கள் அவருக்கு யுக்தமாகத் தோன்றுகிற சங்கம் அல்லது சங்கங்களைக் கொண்டு சிபார்சு செய்யச்சொல்லி அச்சிபார்சை யனுசரித்து நியமனம் செய்துவருவார்.

---

**The following is a list Of Patrons, Subscribers and Supporters of the Viveka Chintamani, most of whom have expressed their Sympathy, either in person or through letter, with the objects of the "Diffusion of Knowledge Agency" in response to the "Appeal on behalf of the masses" issued by the said Agency.**

### Patrons.

Dewan Bahadur S. Subramania Iyer, C. I. E.
The Luz, Madras.

Rai Bahadur, SrilaSri Thirunganasambantha,
Pandara Sannadhi Avergal, Matathipatti,
Madura.

M R Ry. M. V. Alaghirisamy Naidu Garu,
near West Masi Street, Madura.

### Subscribers & Supporters

,, T. V. Sivakumara Sastrial B.A, L.T.
Teacher's College, Saidapet.

,, Subramania Iyer B. A.
Manager U. C. S. Commr's. office
High Road Egmore.

M R Ry. M. S. Kuppusami Iyer B. A.
Hd. Clerk, Office of the D. P. I.
15. High Road, Egmore.

,, M. Viraraghavachariar B. A.
Venkatesa Naick Road, Triplicane.

,, C. Singaram Pillay B. A.
No. 30 Ramaswamy Street, Black Town.

,, A. Seshia Sastriar Avl. C. S. I.
Dewan Regent, Pudukota.

,, S. A. Saminatha Iyer Avl.
Pleader, Tanjore.

,, R. Anantarama Iyer Avl. B. A.
5 Copies. President, Taluq Board,
Srivilliputtur.

M R Ry. Madhava Rao,
Clerk Traffic Supt's office,
B. S. Railway, Rangoon.
" Saravanamuttu Pillay,
Assist. Station Master,
Coimbatore.
" Anga Gounder,
Singarampallayam, Coimbatore.
" T. N. Lakshmana Aiyangar,
Pleader Ambasamudram.
" M. Shama Row, M. A.
Assist., Secretary,
Mysore Educational Dept.
Bangalore.
" K. Subramania Pillay Avl.,
நற்றமிழ் இலக்கண வித்வான்
ஸ்கூல் மாஸ்டர், ஆண்டிப்பட்டி,
Periayakulam Taluq.
" W. B. Authimoola Aiyar,
நயினியப்பஞர் தெரு
Chintadrepet, Madras.
" K. G. Sesha Iyer B. A. B. L.
High Court Vakil,
Trivendram.
" A. Periasawmy Pillay Avl.
Sub-Overseer D. P. W.
Mayaveram.
" V. Vythilingam Pillay Avl.,
Sub-Auditor, Comptroller's office,
Rangoon.
" Chinnappa Pillay,
Sub-Auditor, Comptroller's office,
Rangoon.
" Kannuswami Nainar Avl.
Clerk Commissarite office,
Myingyan, *U. Burma.*
" R. Sankara Iyer,
Head Master, Board School,
Chendarapatti, Attur Taluq.
" S. Ramaiyer,
Vadiveeswaram Nagercoil Post.
" A. N. Vedanayagam Pillay,
Clerk Comptroller's office,
Rangoon.
" Paramasivam Pillay,
Clerk, Comptroller's office, Rangoon.
" L. Steevens Iyiah Pillay,
c/o Mr. S. Namasivaya Pillay,
Clerk Budget Section,
Comptroller's office Rangoon.
" D. Mohun Roy Naidu Garu,
Clerk, commissioner's office,
Meiktila, Upper Burmah.
" Markandam Pillay,
Railway Station Master,
Thedaw, Via Rangoon.
Mr. T. A. Arokiam Pillay,
Clerk, Central Jail,
Bassein, Lower Burmah.
M R Ry. C. A. Appadurai Pillay, Compositor,
Govt. Press, Rangoon.

M R Ry. V. A. Vydinatha Iyer,
Ag. 2nd Master, L. F. School, Mangeri.
" G. Srinivasa Row,
Secretary, Union club, Madura.
" A. Rama Rao, B. A. Sub-Registrar,
Thallakulam, via Madura.
" V. Bashyachariyar, B. A., B. L.
High Court Vakil, Madura.
" D. Soundara Raja Iyengar,
Pleader, Madura.
" R. Venketeswara Iyer, Manager,
2 Copies. Native College, Madura.
" P. Subbaroya Iyer B. A.,
First Grade Pleader, Madura.
" M. Venkatasawmy Naidu Garu,
of Madura Now at Madras.
The Secretary,
Technical Institute, Madura.
" S. Narayanaswamy Iyer Avl.,
Son of late Subramania Iyer B.A., B.L.
New Street, Madura.
" M. S. Subramania Iyer Avl. B.A., B.L.
New Street, Madura.
Rai Bahadur R. Ramasubba Iyer B.A., B.L.
High Court Vakil, Madura.
Dr. Kandya Pillay B. A., M. B., C. M.
Assist. Surgeon, Madura.
M R Ry. N. Sundaram Iyer, Pleader,
New Street, Madura.
" E. Streenivasachariar Avl.
Treasury Deputy Collector,
Thanappa Mudally Agraharam,
Madura.
" Venkataranga Iyer Avl.
Sub-Judge, Madura.
" Sreenivasa Iyer Avl. B. A.,
Head Master, American Mission School,
Madura.
" D. S. Krishnaswamy Iyer Avl. B A.
Assist. Inspector of Schools, Madura.
" Streenivasa Row Avl.
Deputy Collector,
New Street Madura.
" G. Jagannadha Iyer Avl, B.A., B.L.
Stationary Sub-Magistrate, Madura.
" C. Sundara Mudaliar Avl.
Head Quarter Inspector,
Goodshed Street, Madura.
" V. A. Ramasamy Iyer Avl.
Huzur Sheristadhar,
Thanappa Mudaly Agrahaarm, Madura.
" S. Chellam Iyer Avl.
Contractor and Mirassidhar,
Thengarai, via Sholavandan, Madura.
" J. M. Nallaswamy Pillay Avl. B.A., B.L.
Dt. Munsiff, Tirupattur (Salem Dt.)
" V. Kameswara Iyer Avl. B.A.,
Professor, Maharajah's College,
Pudukota.
" S. Krishnamachariar Avl.
Sub-Engineer D. P. W. Madura.

M R Ry. A. Coopoosamy Pillay,
Contractor D P. W.
Camp Madanully, Goribidnur Taluq,
Kolar Dt.

„ M. K. Vythinatha Iyer B.A., B.L.
New Street, Madura.

„ C. R. Raghavachariar Avl.
Sub-Registrar, Tiruvadani, Madura.

„ M. C. Krishnasamy Iyengar,
c/o M. Rangachariar Esq. M. A.
Trivandram.

„ O. N. Krishna Row, Vakil,
Avanashi.

Rev. Sidney Long,
Coimbatore.

„ Annadurai Iyer Avl.
Single Row Street,
Batlagundu, Madura.

„ B. M. Vythianathaiyar Avl.
Manager H. M. School, Batlagundu.

„ M. Krishnaiyengar,
Secretary, *சேதுஜனசங்கம்*, Devakotta.

„ M. A. Saminathanchettiar,
93, Market Street Singapore.

„ P. R. Narayana Iyer Avl.
Assist. Superintendant,
Rev. Survey, Trichinopoly.

„ T. Rungasawmy Mudaliar,
Clerk, Chief Commissariat office,
Myingyan, U, Burma.

„ M. Krishnasawmy Naidu,
Assist. Supt., Comptroller's office,
Rangoon.

„ Ruthna Mudaliar,
Clerk Comptroller's office,
Rangoon.

„ Subramania Pillay,
Clerk Comptroller's office,
Rangoon.

„ N. Muttukumarasami Pillay,
Late Rev. Inspector, Shermadevi.

„ T. S. Vaidyanada Iyer,
Scretary, Students Literary Club,
Karantattangudy, Tanjore.

„ V. Krishnasawmy Iyer B, A.
Pleader Madura.

„ T. A. Manickam Pillay,
Hospital Assistant Panruti.

„ T. A. Swamiah Pillay
Gopeng Perak.